# கல்கி

KALKI 23-1-83 ரூ 1.20



# "காம்ப்ளான்" ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான் ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.



"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்-பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக — சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.




## திட்டமிட்ட பரிபூரண உணவு
# காம்ப்ளான்®

GLC. 10-2015 TM

# ஒரு மாலை, ஒரு மேடை நான்கு நாடகங்கள்





ஒரு பார்ட்டியில் சுஜாதாவைச் சந்தித்தேன்.

நான்: பூர்ணம் விசுவநாதனுக்காக நீங்கள் இன்னொரு நாடகம் எழுதிக் கொடுத்திருப்பதாகக் கேள்விப் பட்டேன். அதைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல முடியுமா?

சுஜாதா: ஓ... சொல்கிறேனே! நான்கு சிறு ஓரங்க நாடகங்கள் சேர்ந்தது அது. 'வாசல்' என்று பெயர். முதல் கதை முன்பு ஆனந்த விகடனில் வந்தது. இரண்டவது கதையை நாடகத்துக்கென்றே 'ஸிம்பாலிக்'காக எழுதினேன். மூன்றாவதுகதை பழமைக்கும் புதுமைக்கும் நடக்கும் மோதல். ஒரு குடும்பத்தில் இருக்கும் வயதான பெரியவர் பழைமையையே விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார். அதே குடும்பத்திலுள்ள இளம் வாலிபன் ஒருவன் எதிலும் புதுமையைப் புகுத்தத் துடிக்கிறான்!..... நான்காவது கதை ஒரு யந்திரத்துக்கும் மனிதனுக்கும் நடக்கும் போராட்டம்....

நான்: நான்காவது கதையின் 'தீம்' வித்தியாசமாக இருக்கிறதே! அதைப் பற்றிக் கொஞ்சம் விவரமாக....

சுஜாதா: பொம்மைகள் செய்யப்படும் ஒரு பெரிய தொழிற்சாலையில் பணி புரியும் ஒரு சிறந்த கலைஞன் நிறைய கண்ணன் பொம்மைகள் செய்கிறான். புதிதாகத்தொழிற்சாலையின் நிர்வாகத்தை ஏற்கும் ஒரு எம். பி. ஏ. படித்த இளைஞன் பொம்மைகள் செய்வதற்கு ஒரு மெஷினைக் கொண்டு வருகிறான். அதனால் நிறைய நேரத்தை மிச்சப்படுத்தலாமே என்று சொல்கிறான். ஆனால் கலைஞன் இதை ஒப்புக் கொள்ளவில்லை. யந்திரம் உருவாக்கும் பொம்மைகளில் தன்னுடைய பொம்மையில் இருக்கும் ஜீவன் இருக்காது என்று வாதாடுகிறான்.... இப்படிப் போகிறது கதை.....

இச்சமயத்தில் பார்ட்டிக்கு வந்திருந்த வேறு யாரோ சுஜாதாவின் கவனத்தைக் கவர்ந்து இழுத்துக் கொண்டு போய்விட்டார்கள்!

- அனிதா ராமச்சந்திரன்



மானேஜர்: ஏன்யா ஆபீசுக்கு லேட்?
கிளார்க்: கொஞ்சம் கண் அசந்துட்டேன் சார்!
மானேஜர்: ஆபீசுக்கு வரதுக்குள்ளே அப்படி என்னய்யா அவசரம்?
— ஜெய்சங்கர்

# செய்திகள், வாசிப்பது செம்பியன் 

''தமிழ்நாடு பூம்புகார் கப்பல் கார்ப்பரேஷன் புதிதாக இரு கப்பல்கள் வாங்கத் திட்டமிட்டிருந்தது. இதற்கு மத்திய அரசு அனுமதி வழங்கவில்லை'' என்றார் திரு ராமச்சந்திரன்.

''அப்படியானால் தூத்துக்குடி அனல்மின் நிலையத்துக்கு நிலக்கரி கொண்டுபோவது பிரச்னையாகி விடுமே'' என்று நிருபர் கேட்டபோது ''கப்பல் கவிழ்ந்து விடாது'' என்றும் ''மாநில அரசு விமானத்தில் தூத்துக்குடிக்கு நிலக்கரி தூக்கி வரும்'' என்றும் கூறினார். முதல் படியாக மீனம்பாக்கத்தில் துருப்



பிடித்துக் கொண்டிருக்கும் முதல்வரின் ஹெலிகாப்டர் இதற்குப் பயன்படுத்தப் படலாம் என்று நம்பகமாகத் தெரியவருகிறது!

பெங்களூருக்கு மனைவி ஜெயா பாதுரியுடன் வந்து சேர்ந்த அமிதாப்பச்சன் தாம் அரசியலில் புகப் போவதில்லை என்று அறிவித்தார். இதைக்கேட்டு ஆச்சர்யமடைந்த பத்திரிகை நிருபர் ''சினிமாவினால் பிரபலமானவர்கள் அரசியலில் புகுந்து பதவிக்கு வருவது சுலபமாக இருக்கும் போது நீங்கள் ஏன் இப்படி முடிவு செய்தீர்கள்?'' என்று வினவ, அமிதாப், ''அரசியல் வாதிகளே நடிகர்களாகி விட்டனர்'' என்றும் ''நடிப்பே அரசியலாகி விட்ட''தென்றும் கூறினார்.''ஸ்டுடியோவா, நாடாளு மன்றமா? சினிமா நடிப்பா அரசியல் நாடகமா?'' என்று யோசித்தபோது, ''அதிக வருவாய்க்கு வழி செய்யும் சினிமாவே தேவலாம்'' என்று முடிவு செய்து விட்டாராம்!

1981ல் 737 சினிமாக்கள் பாரத நாட்டில் உருவாயின. 1982ல் 763 சினிமாக்கள் தயாராயின. இது பற்றித் தொழில் அமைச்சரை அபிப்பிராயம் கேட்டபோது ''உற்பத்தி பெருகவில்லை, பெருகவில்லை' என்று எதிர்க்கட்சியினர் கூப்பாடு போடுவது பொய் என்பதைஇந்தப்புள்ளி விவரம் மெய்ப்பிக்கிறது'' என்றார். ''தயாரான படங்களுள் வெற்றி பெற்றவை எத்தனை என்று பார்க்க வேண்டாமா?'' என்று ஒரு நிருபர் சந்தேகம் எழுப்பியபோது ''இன்றுள்ள சூழலில் சினிமாவை எடுத்து முடிப்பதே வெற்றிதானே!'' என்றார் அமைச்சர்.

கார்த்திகேயனை லீவில் போகுமாறு முதல்வர் ஹெக்டே கூறியதற்கு ஆட்சேபனை தெரிவித்தார் குண்டுராவ். ''கார்த்திகேயன் நான் சொன்னதை நிறைவேற்றக் கடமைப் பட்டவர்; அவரைப் பழி வாங்குவானேன்?'' என்றார்.

''தவறான கட்டளைகளைக் கட்சி அரசியல் ரீதியில் அமைச்சர்கள் பிறப்பித்தால் அது தவறு என்று எடுத்துக் காட்டுவது அதிகாரியின் கடமையல்லவா?'' என்று கேட்கப்பட்டபோது, ''அப்படி கார்த்திகேயன் நடந்து கொண்டிருந்தால் ஹெக்டே பதவிக்கு வரும் வரை காத்திராமல் தானே அவரை வீட்டுக்கு அனுப்பி இருப்பேனே!'' என்றார் குண்டுராவ்.

மகாராஷ்டிரத்தில் போனாலே அதிருப்தியாளர்களை அமைதி காக்குமாறு பணித்திருக்



கிறார் அந்துலே. அவர்கள் சார்பில் தாம் பிரதமரிடம் பேசுவதாகவும் அதுவரை பொறுமையாக இருக்குமாறும் கேட்டுக் கொண்டார். ''பிரதமரிடம் தங்களுக்கு இன்னமும் செல்வாக்கு இருக்கிறதா?'' என்று அறியாமையால் ஓர் அதிருப்தியாளர் வினவ, ''சிமெண்டும் மணலும் போல் இணை பிரியாமல் அத்தனை உறுதியாக இருக்கிறது. எங்கள் நட்பு'' என்றார் அந்துலே.

ரேஷன் கார்டைக் காட்டிப் பத்து ரூபாய் தந்தால் அமுதம் கடைகளில் சென்னை வாசி

களுக்குப் பொங்கல் பொட்டலம் கிடைக்கும். இதில், 2 கிலோ அரிசி, அரை கிலோ வெல்லம், 200 கிராம் பருப்பு, பத்து கிராம் திராட்சை, 10 கிராம் முந்திரி, ஒரு கிராம் ஏலம், ஒரு முழு கரும்பு, ஒரு மஞ்சள் செடி இவை உள்ளடக்கம்.

''எல்லாம் சரி, பொங்கல் தயாரிக்கத் தண்ணீர் வேண்டுமே? ஒரு பானை குடி நீரையும் சேர்த்துக் கொடுப்பீர்களா?'' என்று கேட்டபோது ''இதுபற்றிப் பேச நமக்கு அதிகாரமில்லை'' என்றார் அந்த சிவில் சப்ளை அதிகாரி.



● ● ●

● அகாலிதளத்துடன் ஐந்து மணி நேரம் பேச்சு வார்த்தை நடத்தியபின் ''அகாலி



பிரச்னை தீரும் என நம்பிக்கை பிறந்திருப்ப''தாகச் சொன்னார் பி. சி. சேத்தி. ''குடியரசு தினத்துக்கு முன் ஒரு நல்ல முடிவுக்கு வர முடியும் என்று தோன்று''வதாகக் கூறினார் அமைச்சர்.

''குடியரசு தினத்துக்குள் ஒரு தீர்வு காண முடியவில்லையானால் என்ன செய்வது?'' என்று ஒரு நிருபர் கேட்டதும் அமைச்சர் ''ஹே! இதென்ன கேள்வி, அடுத்த கட்டப் பேச்சுவார்த்தை தொடங்கும், எப்படியும் சுதந்திர தினத்துக்கு முன் பிரச்னைக்கு ஒரு முடிவு காணலாம் என்ற நம்பிக்கை பிறக்கும்'' என்றார்.

● ● ●

● அமெரிக்காவில் விவசாயிகள் குறைவாக உணவு உற்பத்தி செய்யவேண்டும் என்பதற்காக அவர்களுக்கு மான்யம் வழங்கப்படுகிறது என்ற செய்தியை யொட்டி விவசாய அமைச்சரின் கருத்தைக் கேட்டபோது அவர்,

''இம்மாதிரி யெல்லாம் நேரக்கூடிய விபரீதங்களைத் தவிர்க்கத்தான் இந்திராகாந்தி அரசு விவசாயிகளுக்கு நியாய விலை கிடைக்காமல் கவனித்துக்கொண்டு வருகிறது'' என்றார். உற்பத்தி ஏகமாக அதிகரித்து அவதிப்பட வேண்டியதில்லை அல்லவா?''

''இதற்கு மறுபுறமாக இந்தியா உணவு தானியங்களை மறுபடியும் இறக்குமதி செய்யும் படியாகி விட்டதே'' என்று நிருபர் சந்தேகம் எழுப்ப, ''அபரிமிதமான உணவு உற்பத்தியால் அவதிப்படும் நாடுகளுக்கு உதவவே இந்தப் புதுக் கொள்கை உருவாகி இருப்ப''தாக அமைச்சர் கூறினார்!

---




● அறிஞர் அண்ணா அவர்கள் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும்போது இரண்டு பெயர்களைத்தான் அடிக்கடி வைப்பார். ஒன்று அன்பழகன், மற்றொன்று மதியழகன். இந்த இரண்டு பெயர்களையே தேர்ந்தெடுத்துச் சூட்டுவதன் காரணம் என்ன என்று ஒருமுறை அண்ணாவிடமே கேட்டேன்.

அண்ணா சிரித்துக் கொண்டே கூறினார்: 'அதில் விசேஷம் ஒன்றுமில்லை. குழந்தையைப் பார்ப்பேன். அது ஒல்லியாக இருந்தால் அன்பழகன் என்று சூட்டுவேன். சற்றுக் குண்டாக இருந்தால் மதியழகன் என்று சூட்டி விடுவேன்!'

- பேராசிரியர் அன்பழகன் மணிவிழாவில் கே.ஏ.மதியழகன் சொல்லக்கேட்டவர்:

வி. ஜி. நேசன்



# படவிழாவும் பத்திரிகை நிருபர் கூட்டமும்



திரைப்பட விழாக்களில் பல படங்களைப் பார்க்கும்போது 'ஏன் இந்தத் தண்டனை' என்றுதான் தோன்றும். சப் டைட்டில்களை அவசர அவசரமாகப் படித்துக் கொண்டே கதாபாத்திரங்களைக் கவனிக்க வேண்டும். வெளி நாட்டுப் படங்களாதலால் எல்லோரும் நம்மைப் பொறுத்தவரை புது முகங்கள்தான். அதன் காரணமாக யார் எவர் என்பது குழம்பி விடும். இவ்வளவையும் மீறி ஒரு சில படங்கள் நம்மைக் கவர்ந்து விடும்.

இந்தத் தடவை முதல் வாரத்தில் திரையிடப்பட்ட படங்கள் எதுவும் 'ஓஹோ' என்று இல்லை.

ஜப்பான்காரர்கள் கலர் டீவியிலும் எலக்ட்ரானிக்ஸிலும் முதலிடம் பிடித்திருக்கலாம். திரைப் படங்களைப் பொறுத்தவரை கொஞ்சம் பின் தங்கியே இருக்கிறார்கள். 'வாட்டி ஹெல்' என்ற 150 நிமிஷ படத்தைப் பார்த்ததும் தோன்றிய எண்ணம் இது. கதை எங்கெங்கேயோ போகிறது. வன்முறைக் காட்சியும், செக்ஸும் இருந்தால் படம் வெற்றிகரமாக அமையும் என்பதால் நிறைய தூவி விட்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவில் இரண்டு வருஷத்துக்கொரு முறைசங்கீதத்தை அடிப்படையாக வைத்துப் படம் எடுப்பார்கள், முக்கியமாக பாப் மியூசிக். 'யு காண்ட் ஸ்டாப் தி மியூசிக்'இல் இசை நமது நரம்புகளைச் சுண்டி இழுக்கிறது. கதை என்று பெயருக்கு ஏதோ இருக்கிறது.





கதை குறைவாக அல்லது இல்லாத படங்கள் எடுப்பது நம் ஊரிலும் பாஷனாகி விட்டது. (சத்யஜித் ரேயின் சத்கதி என்ற படத்தை முன்பு டீவியில் காட்டினார்களே அதில் ஒரு தொழிலாளி ஒரு மணி நேரம் விறகுபிளந்தே செத்துப்போவதைப் பார்த்திருப்பீர்கள்.) கிட்டத்தட்ட அந்த மாதிரி — இன்னும் கொஞ்சம் கதை, நடிப்பு, டைரக்டரின் திறமை ஆகியவைகளைச் சேர்த்து எடுக்கப்பட்ட படம் 'எலிப்பொறி'. அடூர் கோபாலகிருஷ்ணனின் அவார்டு பெற்ற மலையாளப் படம் பிரிட்டிஷ் பிலிம் இன்ஸ்டிடியூட்டின் விருது பெற்ற படம்.

நிருபர்கள்கூட்டத்தில் அடூர்-சர்வதேச திரைப்பட விழாவில் இவரும் ஒரு ஜூரி — உரியது: ''எந்த விருதும்









படத்தின் தரத்தைத் தெரியப்படுத்துவதை விட, ஜூரியின் கேரக்டரைத்தான் பிரதிபலிக்கின்றன.''ஆகவே விருது பெற்ற படத்தைப்பற்றி நாம் பாராட்டித்தான் ஆக வேண்டும் என்பதில்லை.

இந்தச்சமயத்தில் இந்தப் பட விழாக்களில் நடைபெறும் நிருபர்கள் கூட்டத்தைப்பற்றிச் சொல்ல வேண்டும். பெரும்பாலான கூட்டங்களில் அர்த்தமற்ற கேள்விகளும் அதைவிட அர்த்தமற்ற பதில்களும்தான் இடம் பெறும். வெளி நாட்டு நடிகைகளிடம் ''இந்தியப் படத்தில் நடிப்பீர்களா?'' என்று கேட்பதும் ''ஆஹா!'' என்று அவர்கள் கூறுவதும் சகஜம். (இவர்களைப் போட்டுப் படம் எடுத்தால் ஓடுமா என்பதைப்பற்றி நிருபர்கள் எதற்குக் கவலைப்பட வேண்டும். இவர்களா பணம் போடப் போகிறார்கள்?) இந்தியாவைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? இந்தியப் படங்கள் எத்தனை பார்த்திருக்கிறீர்கள்?'' என்று மாமூலாகக் கேட்பார்கள்.

தீப்தி நவால் என்ற பிரபல (!) நடிகையிடம் கேட்கப்பட்ட கேள்விகள்: திரைப் படங்களில் பெண்களின் மீது ஆதிக்கம் செலுத்தப்படுகிறது என்கிறீர்களா? திரைப் பட நடிகைகளின் அந்தஸ்தை நிலை நிறுத்த ஒரு இயக்கம் ஆரம்பிப்பீர்களா? ஸ்டார் ஆக விருப்பம் உண்டா? உங்களுடைய மறக்க முடியாத படம் எது? — இந்தக் கேள்விகளையும் இதற்கான பதில்களையும் கேட்பது ஒரு தண்டனை!

கிரீஸ் நாட்டுப் படமான 'தி ப்ளீடிங் ஸ்டேச்சூஸ்' ஒரு நல்ல படம். ஒரு மியூசியம் திறக்கப்படவிருக்கிறது. ஒரு சில குற்றவாளிகள் சிறையிலிருந்து தப்பித்து வந்து மியூசியத்தின் கட்டடத்தில் ஒளிந்து கொள்கிறார்கள். தங்கள் கோரிக்கைகள் ஏற்கப்படாவிட்டால்விலை உயர்ந்த சிலைகளைச் சின்னாபின்னப்படுத்துவதாகப் பயமுறுத்துகிறார்கள். (இது ஒருவகையான ஹைஜாக்!) கடைசியில் அவர்கள் தோல்வி அடைகிறார்கள். சின்ன கதையானாலும் அழகாகத் திரைக்கதை அமைத்துச் சிறப்பாக டைரக்ட் செய்திருந்தார் டைரக்டர்.

படத்தின் பெயரைப் பார்த்து நிறைய பேர் முண்டியடித்துக் கொண்டு பார்த்த படங்கள்: தி பெட் (படுக்கை); பிரெஞ்சு லெப்டினென்டின் காதலி. முதல் படம் ரொம்பவும் சீரியஸான படம். மரணப் படுக்கையில் இருப்பவரைப் பற்றிய கதை. இரண்டாவது படத்தில் எதிர்பார்த்த காட்சிகள் இல்லாவிட்டாலும் சிறந்த படமாக அமைந்தது. 1867ம்' வருஷத்தில் நடக்கும் கதை. ஊரின் அபவாதத்திற்கு உள்ளான ஒரு பிரெஞ்சுக்காரரின் காதலியாக 'க்ரேமர் வர்ஸஸ் க்ரேமர்' புகழ் மெரில் ஸ்ட்ரீப் அற்புதமாக நடித்துள்ளார். ஒரு கிரேக்கத் தேவதை போன்ற அழகுடன், அவர் சோகமாக பாவத்தைக் காட்டும்போது, அந்த சோகம் நம்மையும் பற்றிக் கொண்டு விடுகிறது.

அமோல் பலேகர்பத்திரிகையாளர் கூட்டத்தில் தனது படமான 'ஆக்ரியத்' பற்றிக் கசப்பான உண்மைகளைச் சொன்னார். சென்ஸார் பிரச்னையைத் தாண்டி வந்த பிறகு தகவல் ஒலிபரப்பு இலாகா தொல்லை தந்ததாம். வெளி நாட்டு பட விழாவிற்கு இந்தப்படத்தை அனுப்புவதற்கு வசந்த் சாதே தடை போட்டாராம். ''அரசாங்கத்திடம் நான் முறையிடவில்லை; கெஞ்சவில்லை எங்கள் உரிமைகளைத்தான் கேட்கிறோம்'' என்றார்.

★ இரண்டாவது வாரப்படங்களை இனிமேல் பார்க்க வேண்டும், பார்க்க வேண்டுமா என்று கேள்வியும் எழும்புகிறது. காரணம் முதல் வாரப்படங்கள் உற்சாகத்தைப் பறித்துக் கொண்டு விட்டன.

**-பி. எஸ். ஆர்**

---

அருணோதயம் பதிப்பகத்துக்கு இது முப்பதாவது வயது.
முதல் புத்தகம் கண்ணதாசனின் சுமத்ரு ராணி.
பல்வேறு சப்ஜக்ட்களில் 800க்கும் அதிகமான புத்தகங்களை வெளியிட்டுள்ளது அருணோதயம்.
சுமார் 300 குழந்தைகளுக்கான புத்தகங்கள் வெளியிட்டுள்ளது.
குழந்தை இலக்கியப் பணிக்கென 79ல் குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் பாராட்டுக் கேடயம் பெற்றது அருணோதயம்.
இலக்கியத்தில் 'குற்றாலக் குறவஞ்சி' நான்கு பதிப்புகளும் முத்தொள்ளாயிரம் சுமார் 10,000 பிரதிகளும் விற்றுள்ளன.
வருமான வரி சட்டம் பற்றி முதன் முதலாக தமிழில் விரிவாக நூல் வெளியிட்டு, பலதரப்பட்டவர் பாராட்டைப்பெற்றார் அருணன்.
ராஜாஜி ஹாலில் ஆண்டுதோறும் நடைபெறும் நூலக வாரத்தில் தொடர்ந்து ஏழு ஆண்டுகளாய் 'சிறந்த ஸ்டால்' பரிசு வாங்கி வருகிறது அருணோதயம்.

**தொகுப்பு: எஸ். சந்திரமௌலி**

○ அருணன்



# மாமியாரைக் காணோம்!

**உண்மை நிகழ்ச்சி**

ஓர் அரசாங்க வங்கியில் ஆபீசராகப் பணி புரியும் மோகனுக்குப் பிற்பகல் டெலிபோன் வந்தது காலையில் இவர் குழந்தையைப் பள்ளியில் கொண்டு விட மாமியார் கிளம்பியிருக்கிறார் பிறகு அவர் எங்கு போனாரென்று தெரியவில்லை!

மோகனும் அவர் தம்பியும் ஆளுக்கு ஒரு வண்டி எடுத்துக் கொண்டு அக்கம் பக்கம் பூராவும் சல்லடை போட்டுத் தேடினார்கள். அவர் உடம்பில் பத்துப் பவுனுக்கு நகைகள் இருந்தன. இப்போதுதான் திருட்டுக்காகக் கொலைகள் கூட நடக்கின்றனவே. இரவு முழுதும் சிவராத்திரியாகக் கழிந்தது. மறுநாள் மத்தியானம் ''வாங்க! வாசலுக்கு வந்து பாருங்க... அம்மா வந்து விட்டாங்க!'' பார்த்தால்-

மாமியார் பிரமை பிடித்த மாதிரி நின்று கொண்டிருந்தார்; கூட ஒரு பெண்மணி.

எங்கே போனார்? என்ன ஆயிற்று?

... அன்று குழந்தையைப் பள்ளிக் கூடத்தில் கொண்டு விட்டவுடன், மயக்கம் ஏற்பட்டிருக்கிறது. சட்டென்று எந்தப் பக்கம் வந்தோம் எப்படி வீட்டுக்குச் செல்வது போன்றவை மறந்து போய் விட்டன. நேராகக் கால் போன போக்கில் நடந்து போயிருக்கிறார். நடு வழியில் வழி தப்பி விட்டோம் என்பது மனத்தில் உறைக்க, தான் அணிந்திருக்கும் நகைகளை மடியில் செருகி வைத்திருக்கிறார். நங்க நல்லூரிலிருந்து மடிப்பாக்கம் போய்ப் புழுதி வாக்கம் அண்மையில் வந்து விட்டிருக்கிறார். சில பெண்கள் அவரைக் கண்டு இரக்கப்பட்டு, பக்கத்தில் உள்ள ஞான சந்திரம் (சல்வரன் ரியல் எஸ்டேட்) வீட்டில் கொண்டு விட்டிருக்கிறார்கள்.

அந்த வீட்டுப் பெண்மணி மீனா கூறியதாவது:- ''இந்த அம்மாள் நிச்சயம் வழி தப்பி வந்திருக்கிறார்; எதையும் தெளிவாகச் சொல்லக் கூடிய நிலையில் இல்லை. என்று புரிந்தது. பலகாரம் கொடுத்துத் தங்க வைத்தேன். மறுநாள் காலையில் விசாரித்தேன்.

''மருமகப் பிள்ளை பாங்கில் வேலை பார்க்கிறார் என்றார்; எந்த பாங்க் என்று தெரியவில்லை. குழந்தையின் பெயர் கேட்டால், 'பப்பி' என்று வீட்டில் கூப்பிடப் படும் செல்லப் பெயரைச் சொன்னார். என்ன யூனிஃபார்ம் என்று கேட்டால், 'பச்சை' என்று தெரிவித்தார். அந்த யூனிஃபார்ம் உள்ள எல்லாப் பள்ளிக் கூடத்திலேயும் விசாரித்தேன். (பச்சை நிறம் தவறு என்று பிற்பாடுதான் தெரிந்தது)'' குழந்தையை விட்டுவிட்டு வந்து விட்டேனே.'' என்று மட்டும் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். திடீரென ''கோபுரமெல்லாம் பெரிசா இருந்ததுங்க'' என்றார். பளிச்சென்று எனக்குப் பிடிபட்டது. நங்கநல்லூர் ராஜராஜேஸ்வரி கோயில் கோபுரம்! பக்கத்தில் உள்ள பெரியகோயில் இதுதானே! அதற்கப்புறம் சிரமம் இருக்கவில்லை. விசாரித்து உங்கள் வீட்டைக் கண்டுபிடித்தேன்'' என்று முடித்தார் மாமியாருடன் வந்த பெண்மணி.

இவ்வளவு மனிதாபிமானத்தோடு, சிரமம் எடுத்துக்கொண்டு உதவிய மீனாவுக்கு மோகன் நன்றி கூறினார்.

இதுபோல் திடீரென்று மறதியும் மயக்கமும் வரக் காரணம் என்ன? பிரபல நரம்பியல் சிகிச்சை நிபுணர் சொன்னதாவது:

''அடிப்படையான காரணம், மூளையில் ரத்த ஓட்டம் திடீரென்று குறைவதுதான். சில மணி நேர நிகழ்ச்சிகளை முற்றிலும் மறந்து விடுவார்கள். ஆனால் முன்னாலும், பின்னாலும் நடந்தவை நினைவிருக்கும். எனக்குத் தெரிந்து ஒரு இளம் பெண் இப்படித்தான் மில்க் பூத்துக்குச் சென்றவள் திரும்பி வரவே இல்லை. வேறு இடத்துக்குப் போய்விட்டாள். உறவினர்கள் தேடிக் கண்டு பிடித்துக் கூட்டி வந்தார்கள். சிகிச்சை செய்தேன்.

''லேசான ரத்த அழுத்தம், நீரிழிவு போன்றவை இதற்குக் காரணமாக இருக்கக் கூடும். ஆனால் வெளிப்படையான அறிகுறிகள் பளிச்சென்று தெரியாது; எனவே ஜாக்கிரதையாகப் பரிசோதித்துச் சிகிச்சை அளிக்க வேண்டும். மருத்துவ மொழியில் இதை "T.G.A" (Transient Global Amnesia) என்று கூறுவார்கள்.''

பேட்டி: தமயந்தி

■ உதவிபுரிந்த திருமதி மீனா








# கல்கி

1983 ஜனவரி 23
துந்துபி தை 10
மலர் : 41 இதழ் : 26




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# நூலக இயக்கத்தில் நூலான் புடை!

குழந்தைகளின் பசிக்கு சத்துணவு போடும் தமிழக அரசு மக்களின் அறிவுக்கு நல்லுணவு அளிக்க அவசியமில்லை என்று கருதிவிட்டது வருந்து தற்குரியது.

திரு தில்லைநாயகம் ஏழு ஆண்டுகள் நூலக இயக்குனராகப் பதவியில் இருந்தபோது புத்தகப் பதிப்பாளர்கள் ஒரு நேர்மையாளருடன் தொடர்பு கொள்ள வேண்டியிருப்பதில் மன நிறைவு அடைந்தார்கள். அவர் நேர்மையாளராயிருந்ததோடு பிரசுரகர்த்தர்களையும் நேர்மையாளர்களாக்கினார். நூலகப் பதிப்பு என விலை கூட்டிப் போடும் பழக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து ஃபாரத்துக்கு 50 பைசா என விலை நிர்ணயித்தார்.

வேறு ஒரு காரணத்துக்காக முதல்வர் இவரிடம் குறைகண்டு சீட்டுக் கிழித்து அனுப்பிய பின்னர் வந்து சேர்ந்த சாம்பசிவம் 80, 81ம் ஆண்டுகளுக்குப் புத்தகங்கள் வாங்க ஆர்டர் தயாரித்தார். தமிழகத்தில் மொத்த முள்ள 215 பிரசுரகர்த்தர்களில் 70 நிறுவனங்களுக்கு ஆர்டர்கள் போடு முன்னரே இவரும் இலாக்கா மாற்றம் செய்யப்பட்டார். ஃபாரத்துக்கு 50 பைசாஎன்பது இன்றைய விலைவாசிகளுக்குக்கட்டிவராது என உணர்ந்து 75 பைசாவாக உயர்த்திய புண்ணியவான் இவரே.

சாம்பசிவத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தார் ஆனந்த ராஜ். அவ்வளவுதான். பதிப்பகங்களுக்கு ஆர்டர் வருவது அடியோடு நின்றது. 1982ல் ஒரே ஒரு புத்தகத்துக்குக் கூட ஆர்டர் கிடையாது. ஒரு நல்ல புத்தகம் வெளியிட்டால் 600 பிரதிகள் மாநிலத்தில் உள்ளபல்வேறு நூலகங்களுக்கு வாங்கப்படும் என்ற நம்பிக்கையை இழந்து விட்ட பிரசுரகர்த்தர்கள் தொடர்ந்து இந்தத் தொழிலில் இருப்பதா இழுத்து மூடுவதா என்று யோசிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டனர். போதாச்குறைக்கு மத்திய நூலகத்திலிருந்து பதிப்பகங்களுக்கு இன்னும் 40 லட்சம் ரூபாய் பாக்கி வரவேண்டியிருக்கிறது!

பொதுமக்களிடம் புத்தகம் வாங்கும் சக்தி இல்லை. 'நூலகங்களில் அவ்வப்போது புதிய புத்தகங்கள் வரும், படிக்கலாம்' என்ற அவர்கள்



ஆசையிலும் மண் விழுந்தது. வீட்டு வரி செலுத்தும் போது மக்கள் லைப்ரரி செஸ் என்றும் ரூபாய்க்கு 5 பைசா தருகிறார்கள் என்பதை நினைவில் கொண்டால் அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதியின் பரிமாணம் புரியும்.

எழுத்தாளர்களுக்கோ இதனால் ஏற்பட்டுள்ள துன்பம் இவ்வளவு அவ்வளவு அல்ல. பத்து ரூபாய் பெறுமானமுள்ள ஒரு புத்தகம் விற்றால் எழுத்தாளனுக்கு ஒரு ரூபாய் கிடைக்கும். இப்போது இந்த அற்ப சொற்ப வருவாயும் இன்றி அவன் வேதனையில் ஆழ்ந்திருக்கிறான்.

'நூல்களை வாங்குவதை மையப்படுத்தி யிருந்த முறையை மாற்றி மாவட்ட நூலக ஆணையர் வாங்க அனுமதிக்கப் போகிறோம்' என்கிறார் அரங்கநாயகம். சங்கடம் என்னவெனில் மாவட்ட நூலகங்களில் புத்தகம் வாங்கப் பணம் இல்லை. நகராட்சி வசூலிக்கும் லைப்ரரி செஸ் அதன் இதர பணிகளுக்கே செலவாகிப் போகிறது. நூலக அதிகாரிகளுக்குப் போய்ச் சேருவதே கிடையாது. அப்படியே போய்ச் சேர்ந்தாலும் இந்த ஏற்பாடு லஞ்ச ஊழல் அதிகரிக்கவே வழி வகுக்கும் என்று புத்தக பிரசுரகர்த்தர்கள் அஞ்சுகின்றனர். சென்னை மாநகராட்சியே ஒரு கோடி ரூபாய் மத்திய நூலகத்துக்குத் தரவேண்டியது பாக்கி நிற்கிறது என்னும் போது சிறிய நகராட்சிகள் எங்கே ஒத்துழைக்கப் போகின்றன?

கல்வி வளர்ச்சியும் நூலக இயக்கமும் சகோதரர்களைப் போன்று கரம் கோத்துச் செல்ல வேண்டியவை. உலகறிந்த இந்த உண்மை தமிழக ஆட்சியாளருக்குப் புரியவில்லையெனில் ஆட்சி நடத்துவது பற்றிய அரிச்சுவடிப் பாடமே அவர்கள் கற்கவில்லை என்றாகும்.






ஒரு வார லீவு முடிந்து விட்டது. இன்று ஆபீசுக்குப் போக வேண்டும் என்று நினைக்கும் போது மனம் தெனாலிராமன் குதிரையாய் இயங்கிற்று. இந்த ஏழு நாட்களில் இரண்டு பெண்களைப் போய்ப் பார்த்ததில் இவனுக்கும் பிடிக்கவில்லை, அம்மாவுக்கும் பிடிக்கவில்லை. இந்தப் பெண்களும் வீட்டோடு இருக்கும் பெண்களே. சிவகுமார் தன் நிலையைத் தெளிவாகவும், வெளிப்படையாகவும் சொல்லிவிட்டான்.

—வேலைக்குப் போகிற பெண்ணாக இருக்க வேண்டும்.

இப்படியொரு லட்சியம், ஒரு நோக்கம், ஒரு தேவை என்று மனத்தில் விழுந்ததிலிருந்து பார்க்கும் பெண்களின் அசாதாரணமான ஜாதகங்களும், அழகுமெல்லாம் இரண்டாம் மூன்றும் பட்சமாய் ஒதுங்கிக்கொண்டன.

சிவகுமார் அரசாங்க அலுவலகமொன்றில் குமாஸ்தா. 'எந்தப் புதுமையும் மாற்றமும் இல்லாத, பழுப்பு நிற உத்தியோகம்.

''நான் லீவில் இருந்தப்போ ஆபீஸிலே விசேஷம் ஏதாவது உண்டாப்பா?'' என்று நுழையும்போதே கேட்டுக் கொண்டான்.

''செக்ஷனுக்குப் புதுசா ஒரு பொண்ணு வந்திருக்குப்பா சிவகுமார். பர்மனெண்ட் இல்லே பாவம். சும்மா டென்—ஏ ஒன்!'' என்றான் ஒருவன்.

மேற்கொண்டு அந்தப் பெண்ணைப் பற்றிப் பேச முடியாதபடி செய்து விட்டது அந்தப் பெண்ணின் வருகை.

சிவகுமார் அவளைப் பார்த்ததும் அதிர்ச்சியடைந்து போனான். அவள் யாரையும் நிமிர்ந்து பார்க்காமல் மஸ்டரில் கையெழுத்திட்டுவிட்டுத் தன் பிரிவுக்குப் போய் உட்கார்ந்து விட்டாள்.

சிவகுமார் அவளுடைய பெயரை நினைவு படுத்திப் பார்த்தான். கொஞ்சம் தகராறு! ராஜேஸ்வரியோ, ராஜலட்சுமியோ தானிருக்க வேண்டும். இரண்டு வருடமாகிவிட்டது.

தாம்பரம் பெண். அது நன்றாக ஞாபகமிருக்கிறது அவனுக்கு. ஐ. ஏ. எஸ். குடியிருப்புப் பகுதியெல்லாம் தாண்டிக் கால் வலிக்க நடந்து, அவனும் அம்மாவும் அந்தப் பெண்ணைப் பார்க்கச் சென்றார்கள். அம்மாவைக் கேட்கச் சொன்னான் இவன்.

''ஏன் வேலைக்கு அனுப்பவில்லையா?''

''அனுப்பல்லே...''

''அனுப்பக் கூடாதுன்னுட்டா?''

''அப்படியும் இல்லே... என்னமோ அனுப்பல்லே...''

போய்விட்டு வருகிறோம் என்று வந்தவர்கள்தான். சிவகுமார் பொருளாதார ரீதியாகத்தான் தன் கல்யாணத்தைப் பார்த்தான்.

அதே பெண்தான் இந்த டென்-ஏ-ஒன் குமாஸ்தா. வேலைக்கு அனுப்பியிருக்கிறார்கள். மஸ்டரில் பார்த்தான். குமாரி ராஜேஸ்வரி என்று எழுதப் பட்டிருந்தது.



சாப்பாட்டறையில் யாரோ அவனுடைய மெலிந்த உடம்பைப் பற்றித் தரக் குறைவாகப் பேசியது சிவகுமாருக்கு ஒரு மாதிரியாக இருந்தது. இதுவரை அருகில் மௌனமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தவன் மெதுவாக இவனிடம் பேச்சுக் கொடுத்தது பின்னும் மோசமாக இருந்தது. அவன் எப்போதுமே அப்படித்தானென்றாலும் இப்போது அந்த ராஜேஸ்வரியை வைத்துப் பேசுவதை சிவகுமாரால்கேட்கப் பொறுக்கவில்லை. யாராவது பெண் தன்னைப் பார்த்தாலே அதை அபத்தமான பொருளில்தான் எடுத்துக் கொள்வான். எடுத்துக் கொள்வதோடு எல்லாரிடமும் சொல்லிப் பெருமை யடித்துக் கொள்வான். இரண்டு மூன்று நாட்களாகவே ராஜேஸ்வரி தன்னை ரகஸ்யப் பார்வை பார்ப்பதாகச் சொன்னான் அவன். உடனே அவனை ஓங்கி அறைய வேண்டும் போலிருந்தது சிவகுமாருக்கு.

பெண் பார்த்த முன்னாள் அறிமுகம்...அது அன்றே முறிந்து போய் விட்டாலும் என்னவோ ஓர் உரிமை தனக்கு இன்னும்அவளிடமிருப்பது போன்ற உணர்வே வந்து போனது சிவகுமாருக்கு. இப்போது அவள் உத்தியோகத்திலும் இருப்பவள் என்ற கவனம் அவனது உள்ளுணர்வில் இடறி விழுந்திருந்தது.

மறு வாரத்தில் நல்லதொரு வாய்ப்புக் கிடைத்தது. ஆயுத பூஜைக்கு அலுவலகம் தயாரானது.பண வருவில் சிவகுமார் இறங்கினான். ராஜேஸ்வரியிடம் சுற்றறிக்கையைக் காட்டி அவளிடமிருந்து மூன்று ரூபாயைப் பெற்றுக் கொடுத்தான்.

''வீட்டிலே எல்லாம் சௌக்கியமா?'' என்று மிக உரிமையோடும் நெருக்கத்தோடும் கேட்டான்.

''எப்பவும் போல்சௌக்கியம்தான்'' என்றாள் அவளும்.

நல்லது. இவள் அவனளவுக்கே நினைவில் மறக்காமல் வைத்திருக்கிறாள் போலும்.

''உங்கிட்டே கொஞ்சம் தனியாப் பேசணும்'' என்றான்.

அவள் சட்டென்று பதில் எதுவும் கொடுத்துவிடவில்லை.

''சாயங்காலம் ஆபீசு முடிஞ்சதும் எனக்கோசரம் கொஞ்சம் டயம் ஒதுக்க முடியுமா?'' என்று தனிவாகக் கேட்டான்.

அவள் மௌனமாகத் தலையசைத்துவிட்டு, சிவகுமார் திருப்தியுடன் திரும்பிப் போவதையே பார்த்துச் சிரித்துக் கொண்டாள்.

அரைமணிநேரம் மௌனமாகவே அந்தப் பூங்காவில் கழிந்து விட்டது.

''வேலைக்குப் போற பொண்ணைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு அண்ணைக்குச் சொல்லி உன்னை வேணாம்னு சொன்னதும் உங்க வீட்டிலே எல்லாருக்கும் கோவமா யிருந்திருக்கும் இல்லையா?'' என்று கேட்டான் சிவகுமார்.

''கோபப்படறதுக்கு என்ன இருக்கு. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விதமான எதிர்பார்ப்பு. வேலைக்குப் போகக் கூடாது, வீட்டோட இருக்



கணும்னு ஒருவர் கண்டிஷன் போடறூர். இன்னொருவர் வேலைக்குப் போறவதான் வேணும்னு கேக்கறூர்...''

''என்னைப் பத்தி உங்க வீட்டிலே அண்ணைக்கு என்ன மாதிரிஅபிப்பிராயப்பட்டாங் கங்கறதை நான் தெரிஞ்சுக்கலாமா?''



செப்?வயில் நடந்த தாழ்த்தப்பட்டோர் மற்றும் பிற்படுத்தப்பட்டோர் மாநாட்டில் ஜனநாயகக் கட்சித் தலைவர் சந்திரஜித் யாதவ் பேசும்போது தமிழ் நாட்டில் மின்வெட்டும் தண்ணீர்த் தட்டுப்பாடும் நிலவுவதாகவும் உணவுத் தட்டுப்பாடுகூட வரக் கூடும் என்றும் கூறிவிட்டுக் கருணுநிதி உத்தர பிரதேசத்துக்கு வருவாராஞல் அங்கு இவையெல்லாம் தாராளமாகக் கிடைக்கும் என்று கூறினர்.

பின்னர் பேசிய கருணுநிதி, ''சந்திரஜித் யாதவ் நான் உ. பி.க்கு வந்தால் உணவு, தண்ணீர் பவர் எல்லாம் தாராளமாகத் தருவதாகக் கூறினர். அவரால் உணவும் தண்ணீரும் தர முடியும் ஒப்புக்கொள்கிறேன். ஆஞல் எனக்கு மீண்டும் பவரைத் தர அவரால் முடியாது. நான் எந்தப் பவரைக் குறிப்பிடுகிறேன் என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள்'' என்று கூறியதும் சபையில் கைவொலி அடங்க வெகு நேரமாயிற்று.

— விஜிநேசன்

''இரண்டு பேரும் சம்பாதிக்கற மாதிரியிருக்கணும்னு ஆசைப்படறவர்னு நினைச்சாங்க அவ்வளவுதான்.''

''நீ என்ன நினைச்சே?''

''என்ன நினைக்கிறது... இன்னும் கொஞ்சம் பேர் என்னை உங்களுக்கு முன்னுலேயே வந்து பார்த்துட்டுப் போனுங்க. அவங்க வெவ்வேற காரணத்துக்காக என்னை வேண் டாம்னுட்டுப் போனவங்க. அதிலே நீங்களும் ஒண்ணுன்னு எடுத்துண்டேன். அவ்வளவு தான். இன்னும் சொன்னு, நீங்க என்னை வேண்டாம்னு சொன்னவுடனே நான் உங்களை மறந்து போயிட்டேன். மறுநாளிலேருந்து நீங்க, உங்க வருகை, கண்டிஷன் பேச்சு எல்லாமே எனக்கும், எங்க வீட்டு மனுஷாளுக்கும் மறந்து வந்து தேய்ஞ்சு போச்சு...''

''நான் இந்த ஆபீசில்தான் இருக்கேங் கறதை உங்க வீட்டிலே நீ போய்ச் சொல்லியிருப்பியே?''

''இல்லே...''

''ஏன்?''

''ஏன் சொல்லணும்?''

அவள் அவனுடைய விவகாரத்தை முழுக்க முழுக்கத் தன் பிராந்தியத்திலிருந்து அப்புறப்படுத்தி விட்டதாகக் காட்டிக்கொள்கிருள் என்று நினைத்தான் சிவகுமார்.

''அப்போ, நான் இப்படி தனியா மீட் பண்ணிப் பேசலாம்னு கேட்டதும் சரினு வந்தயே, அதெப்படி?''

''நேருக்கு நேராக் கேட்கிறப்போ முடியாதுன்னு சொல்றதா? சரி, நான் ஒண்ணு கேட்கிறேன். கல்யாணம் பண்ணிக்கிறதிலே உங்களுக்கு இன்னும் அதே கொள்கைதானு, எம்ப்ளாய்டு கர்ல்?''

''அதே கொள்கைதான்.''

அவள் உதட்டைக் கடித்தபடி சிரித்து விட்டு, ''சரி போகலாமா?'' என்ருள்.

சாப்பாட்டறையில் வழக்கமாக சவடாலடிக்கும் பக்கத்து இருக்கை குமாஸ்தா இப்போது மூச்சு விடுவதில்லை. மெதுவாக ஒரு நாள் சிவகுமாரின் காதோடு சொன்னுன்:

''என்னப்பா டென்-ஏ-ஒன்னை ஓரங் கட்டறே? அடிக்கடி ஹோட்டல், பார்க்குனு ரெண்டு பேரும்சுத்தறீங்க போலயிருக்கு...''

''உன் வேலையைப் பாரு. அடுத்தவன் விஷயத்திலே அனாவசியமாத் தலையிடாதே!''

''நீ ஜமாய்ப்பா...''

அன்றைக்கு ராஜேஸ்வரியைப் பூங்காவுக்கு வரச்சொல்லிவிட்டுச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்ததை அந்த வம்பன் பார்த்திருக்க வேண்டும். அதற்குப் பிறகு எதேச்சையாகஇருவரும்ஓட்டலில் நுழைந்ததையும் பார்த்திருக்க வேண்டும். அவனுக்கு அன்று ராஜேஸ்வரியைத் தனியாகச் சந்திக்கவேண்டும் என்று பட்டது.

பூங்காவில் இருவரும் கணிசமான இடைவெளி விட்டே உட்கார்ந்திருந்தனர்.

''அந்த பி-4 இருக்கானே, சுத்த மோசம் ராஜேஸ்வரி. நம்ம ரெண்டு பேரையும் சேர்த்து வச்சு எல்லார் கிட்டேயும் என்னென்னமோ உளறிண்டு வர்ரான்.''

''ஓஹோ... அதுக்குத்தான் பேசக் கூப்பிட்டீங்களா?''

''நாம ஒருத்தரை ஒருத்தர் நேசிக்கிறதா நினைச்சுண்டு பேசறுன்...''

''ம்...''

அவளேயே பார்த்துவிட்டு மெதுவாகச் சொன்னுன்:

''நான் உங்க வீட்டுக்கு வரலாம்னு முடிவு பண்ணி விட்டேன்.''

அவள் திடுக்கிட்டுக் கேட்டாள்: ''எதுக்காக?''

''சம்மதம்னு வந்து சொல்ல.''

கலகலவென்று நகைத்தாள் ராஜேஸ்வரி.

''நான் நிரந்தரமான வேலையில இல்லாதவ. ஒரு டென் ஏ ஒன். என்னைக்காச்சும் ஆஸ்டாக்கிடுவாங்க. உங்களுக்கு நிரந்தரமா சம்பாதிக்கிறவளா வேணும்...''

''பரவாயில்லே. வேலை போனாலும் மறுபடியும் கிடைச்சுடும்.''

''ஒருவேளை கிடைக்கவேயில்லேன்னா?''

''போகட்டும்னு கவலைப்பட மாட்டேன்.''

ராஜேஸ்வரி சிறிது நேரம் குனிந்தபடியே இருந்துவிட்டு நிமிர்ந்துபார்த்துச்சொன்னாள்:

''அப்படின்னா அந்த நல்ல காரியத்தை வேற யாருக்காச்சும் குட்டோட குடாப் பண்ணுங்க. வேலையில்லாதவளா, படிப்பும் இல்லாதவளா கஷ்டப்படற பொண்ணுங்க நிறைய இருக்கு. புண்ணியம் கட்டிக் கோங்க....''

இப்போதுதான் அவன் அடி வாங்கினவன் மாதிரி பேசலானான்.

''நீ என்ன சொல்றே?''என்று கேட்டான்.

''எனக்கு ரெண்டு மாசத்துக்கு முன்னே வேயே நிச்சயமாயிடுச்சு'' என்றாள் அவள்.

''ஓ.ஐ ஆம் சாரி...நான் என்னென்னமோ நினைச்சு...''

''பரவாயில்லே.''

அவர்கள் எழுந்து புறப்படும்போது ராஜேஸ்வரியே கூறினாள்:

''அவர் ஒரு கம்பெனியிலே டென் ஏ ஒன் போல டெம்பரரியாத்தான் உத்தியோகம் பார்க்கிறார். நிச்சயமா நிரந்தரமான இடம் கிடைக்கும்னு அவருக்கு நம்பிக்கை இருக்கு. எனக்கும் இருக்கு. அவர் வேணாம்னு சொல்லியும் நான்தான் இந்த ஆபீஸ்லே எம்ப்ளாய்மென்ட் எக்சேஞ்ச்வழியா கிடைச்ச டென் ஏ ஒன் வேலையை ஒத்துண்டேன். அவருக்கு நிரந்தரமானு நான் வேலை செய்யறதும் செய்யாததும் என்னோட இஷ்டத்தையே பொறுத்தது.''

சிவராமனுக்குச் சற்று நேரத்திற்கு எல்லாமே தற்காலிகமான உணர்வையே தந்தது. பிடிப்பில்லாமல் போய்க் கொண்டிருந்தான்.



''உங்க அப்பா அடிக்கடி சிக்கனமா இருக்கணும்னு சொல்லுவாரா?''

''ஊஹூம்... ஒரு பேப்பரில் எழுதி வச்சிருக்கார். அதை அடிக்கடி எடுத்துக் காட்டுவார்.''

—இளை அ. கதிர்வேல்




குழந்தைகளுக்கு அளிக்கத் தாய்ப்பால் பாங்குகளை அமைக்கலாம் என்று டில்லியில் தாய்ப்பால் புகட்டுதல் பற்றிய ஒரு கருத்தரங்கில் டாக்டர் இந்திரா நாராயணன் யோசனை தெரிவித்துள்ளார். —அ. தங்கமுத்து

பல் ஆஸ்பத்திரியில் ஒருவர்: என்ன டாக்டர் வரிசையா சிலுக்குப் படம் மாட்டியிருக்கு?

டாக்டர்: யாரையும் 'வாயைத் திற' அப்படின்னு சொல்ல வேண்டிய அவசியம் இல்லை பாருங்க!

—எஸ். மாரியப்பன்



நீதிபதி: எதுக்காக வழக்கை ஒத்திவைக்கச் சொல்லிக் கேட்கறீங்க?

வழக்கறிஞர்: என் தரப்புச்சாட்சிகளில் முக்கியமான ஒருவருக்கு இன்று மௌன விரத நாள்! —கே.ஆர்.எம்.



# மீண்டும் எமர்ஜென்ஸி வருமா?

✕ என். டி. ஆர்.

✕ மோ. க. ரத்தினசாமி, மோகனூர் (சேலம்)
? சினிமாவை ஒரு கருவியாகக் கொண்டால் பிரதமராகக் கூட வாய்ப்பு இருக்கும் போலிருக்கிறதே?
! சினிமா பிராபல்யம் மட்டும் அரசியலில் உயர் பதவி பெற உதவும் என்று நான் நம்பவில்லை. என்.டி.ஆர்., எம்.ஜி.ஆர். ஆகியோரிடம் மக்களைக் கவரும் ஆற்றலுடன் அவர்களுக்குத் தலைமை தாங்கி வழி நடத்திச் செல்லும் சக்தியும் இருக்கிறது. அதுவும் மாநில அளவில்தான். நேருஜி, ராஜாஜி, பட்டேல், காமராஜ் போன்ற எத்தனையோ அனைத்திந்தியத் தலைவர்கள் உருவாக சினிமாவா உதவியது? ஏன் நமது பிரதமர் இந்திராவுக்குத்தான் என்ன, பிராபல்யமும் செல்வாக்கும் கொஞ்சநஞ்சமாகவா இருக்கிறது? ஆனால் நம் துரதிர்ஷ்டம், அவர் தமக்குத் தாமே தீங்கு இழைத்துக்கொண்டு நாட்டையும் பாழாக்குகிறார். தம்மிடம் குறை காண்பவர் தம் நண்பர்கள், தேசத்தை நேசிப்பவர்கள் என்று இந்திராகாந்தி புரிந்து கொள்ள வேண்டும்; அல்லது குறைகாண இடமில்லாதபடி நடந்து கொள்ளவாவது வேண்டும். இல்லையேல் அவர் கட்சி மேன்மேலும் தோல்விகளையே சந்திக்க நேரும்.

✕ ஆர். நாகராஜன், பரசலூர்
? கட்சி ஆரம்பித்த ஒன்பது மாதங்களுக்குள்ளாகவே ஆட்சியைப் பிடித்த என். டி. ஆர். பற்றி?
! அவருடைய திறமை, செல்வாக்கு, பிராபல்யம் ஆகியவற்றை நாம் குறைத்து மதிப்பிட வேண்டியதில்லை. எனினும் இவற்றைக் காட்டிலும் அவர் வெற்றிக்கு அதிகமாக உதவியது இ. காங்கிரஸ் ஆட்சியின் குறைபாடுகளே.

✕ வானதி, செக்கவல்லி
? இரும்புக் குதிரைகள் என்பதுதானே சரி?
! தலைப்பு, அசல் இரும்புக் குதிரைகளைக் குறிக்கவில்லை. 'லாரி'களை உருவகப்படுத்துகிறது. எனவே பாதகமில்லை எனலாம். மேலும் ஒன்பது பாலகுமாரனுக்கு அதிர்ஷ்ட எண்ணாக இருக்கலாம்.

✕ ஏ. ஹரிதாஸ், அச்சம்பாளையம்
? ஹைதராபாத்தில் இந்திய கிரிக்கெட் அணியின் ஆட்டத்தைப் பார்க்கும்போது மேற்கு இந்தியத் தீவுகளுக்குப் போக இது சமயமா?
! விளையாட்டுக்களில் வெற்றி கண்டு மகிழும் போதே தோல்வியைச் சகிக்கவும் பழகுவோம். பாகிஸ்தான் டூரில் அடைந்த தோல்விகள் காரணமாக அடுத்த டெஸ்ட் ஸீரிஸை இந்திய அணி சந்திக்கவே வேண்டாம் என்று கூறுவது வீரமல்ல. மேலும் இன்றைய பாகிஸ்தான் கிரிக்கெட் உலகிலேயே மிகச் சக்திவாய்ந்த ஓர் அணியைக் கொண்டிருப்பதை மறப்பதற்கில்லை. நம்மவர் இயன்ற அளவில் போராடினார்கள். மேற்கு இந்தியத் தீவுகளுக்குப் போகட்டும். டீமில் தக்க மாறுதல்களைச் செய்து கொண்டு வெற்றி வாகை சூடட்டும்.

✕ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி
? மீண்டும் எமர்ஜென்ஸி வருமா?
! தேர்தல் முடிவுகளைப் பார்த்தும் மகாராஷ்டிரம், குஜராத், ராஜஸ்தான் முதலிய மாநிலங்களில் இ. காங்கிரஸில் உட்பூசல் அதிகரித்து அதிருப்தியாளர்கள் மலிவது கண்டும் பலர் எமர்ஜென்ஸி மீண்டும் வரும் என்று கருதுகிறார்கள். ஆனால் எமர்ஜென்ஸி மக்களுக்குப் பிடிக்கவில்லை என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்துள்ள இந்திராகாந்தி, அயல் நாட்டினரின் ஆக்கிரமிப்புப் போன்ற வலுவான காரணம் இன்றி எமர்ஜென்ஸி கொண்டுவரத் தயங்கவே செய்வார்.

✕ ஒ. எஸ். உதயசேகர், தக்கலை ★
? ஆந்திரா, கர்நாடகா திரிபுரா தேர்தல்கள் இ. காங்கிரஸை நம்பிக்கைக்கு வெகு தொலைவில் தள்ளிவிட்டனவே?
! அப்படியொன்றுமில்லை. மக்கள் தம்மிடம் வைத்த நம்பிக்கை பொய்த்துப் போகும்படி அநாகரிகமாக பங்காரப்பா நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தால்; தேர்தலில் நின்று ஜெயிக்காத ஹெக்டேயை ஜனதா தலைமை முதல்வராகத் திணித்திருப்பதைப் பார்த்தால் இ. காங்கிரஸ் மீண்டும் நம்பிக்கை கொள்ளலாம் என்றே தோன்றுகிறது.

✕ கே. ஆர். ஜனார்த்தனன், தஞ்சாவூர்
? என்ன புத்தகம் ஸார் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்?



✠ நாயர் ஸான் ✠ பங்காரப்பா ✠ வி-டி. சுவாமி ✠ ராதா ✠ அம்பிகா ✠ விசு ✠ டி. எஸ். சந்தானம்

! இந்தியாவிலிருந்து டோக்கியோ செல்பவர்கள் இந்தியஉணவுக்காக ஏங்கும்போது அபயம் அளிப்பது நாயர்ஸானின் உணவு விடுதி. பல்வேறு வகையான இந்தியப் பொருட்களை நாயர் கார்ப்பரேஷன் ஜப்பானில் விநியோகிக்கிறது. அதிபர் ஏ.எம். நாயர் கேரளத்தில் தமது வாழ்க்கையைச் சீர்திருத்த வாதியாகவும் அரசியல் வாதியாகவும் தொடங்கியவர். மேல் படிப்புக்காக ஜப்பான் சென்ற போது ராஷ்பிகாரி போஸுடன் இணைந்து இந்தியா விடுதலை லீகை உருவாக்கி ஜப்பானிய அரசுக்கும் லீகுக்கும் இணைப்புப் பாலமாக இயங்கியவர். சுபாஷ் சந்திர போஸை விடவும் ராஷ்பிகாரி போஸை ஒருபடி உயர்வாக மதித்து அவருக்கு இந்திய சரித்திரத்தில் முக்கியத்துவம் தரப்படவேண்டும் என்று எண்ணுகிறவர். இதில் கருத்து மாறுபாடு இருக்கலாம். ஆனால் இப்படி வாதாட நாயர்ஸான் என மரியாதையுடன் அழைக்கப்படும் ஏ. எம். நாயரை விட அதிக தகுதியும் உரிமையும் பெற்றவர்வேறுயாரும் இருக்க முடியாது. இந்திய சரித்திரத்தின் ஒரு பகுதியுடன் இரண்டறக் கலந்து விட்ட நாயரின் சுயசரிதம் இப்போது தமிழில் ராணி மைந்தனின் சரளமான மொழிபெயர்ப்பில் கிடைக்கிறது — என்னைப் போன்றவருக்கு ஓசியில். உம்மைப் போன்றவருக்கு 39ரூ விலையில். என்ன செய்ய, காசு கொடுத்துத்தான் வாங்கியாகவேண்டும்; லைப்ரரி ஆர்டர் போடுவதைக் கூட நிறுத்தி விட்டதே தமிழக அரசு! (அசோக் - உமா பப்ளிகேஷன்ஸ், சென்னை-29)

✠ பி. பி. நாராயணன், ஈரோடு

? விசு (அ) வசனகர்த்தா (ஆ) நடிகர் (இ) டைரக்டர் — எதில் அவர் திறமைசாலி?

! நடிகர் - வி (விக்டரி) வசனகர்த்தா — சு (சுமார்) டைரக்ஷன் - ஹும், மூன்றாவது எழுத்தே பெயரில் இல்லையே.

✠ எஸ். மோகன், சென்னை-33

? இவரைச் சந்தித்தது பெரும் பாக்கியம் என்று யாரைப் பற்றியாவது எண்ணியதுண்டா?

! ஒருவரை யல்ல, அப்படி நூற்றுக் கணக்கானவரை ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் சந்தித்து மெய் சிலிர்த்தேன். சமீபத்தில் பூந்தமல்லியை யொட்டிய நாசரத் பேட்டையில் காஞ்சி காமகோடி பீடாதிபதி தலைமையில் வேத சம்மேளனம் நடந்தது. நூற்றுக் கணக்கான வேத வித்தகர்கள் பல்வேறு மாநிலங்களிலிருந்து வந்திருந்தனர். அனுஷ்டானங்களில் ஆங்காங்கே நிலவும் மாறுபாடுகளைப் பற்றிக் கலந்துரையாடி பயன் பெற்றனர். வேத பாராயணமும் மூன்று நாட்கள் நடந்தன. 'கடந்த ஆயிரம் ஆண்டுகளில் இப்படி ஒரு சம்மேளனம் நடந்திருப்பதாகத்தெரியவில்லை' என்று ஆச்சர்யப்பட்டார் அக்னிஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார். 'வேதம் என்பது ஏதோ கடைசி காலத்தில் முக்தி நிலை அடைய உதவுவது என்று மக்கள் நினைக்கின்றனர். தவறு. இன்று. இகவுலக

தராசு

# நீங்கள் கேட்டவை

வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமையவும் வேதம் யோசனைகள் கூறிப் பேருதவி புரிகிறது என்று விளக்கினார் பாலகிருஷ்ண சாஸ்திரி. ஆதிசங்கரர் அத்வைத ஆராய்ச்சி கேந்திரம் சார்பில் பெரும் செலவை ஏற்று விமரிசையாக சம்மேளனத்தை நடத்தி வைத்தவர் தொழிபதிபர் வி. டி. சுவாமி.

⌘ வாஞ்ஜனிதாசன், மதுக்கூர்

? அம்பிகாவும் ராதாவும் இனி கிளாமர் ரோலில் நடிக்க மாட்டார்களென அவர்களின் தாயார் சரசம்மா குறிப்பிட்டுள்ளது பற்றி....?

! கிளாமர் குறையும்போது அப்படி கூறுவது புத்திசாலித்தனம். குறையும் முன்பே கூறுவது தன்னம்பிக்கை. கிளாமரே இல்லாமல் போன பிறகு கூறுவது நகைப்புக்கிட மளிக்கும் அசட்டுத்தனம். நடுநிலை வகிக்கும் சரசம்மா தன்னம்பிக்கை இழக்காமலிருக்கட்டும்.

⌘ ஏ. ஹரிதாஸ், அச்சம்பாளையம்

? என். டி. ராமராவ் பதவிக்கு வந்துவிட்டால் பிராந்திய உணர்வு மக்களுக்கு அதிகமாகிவிடும் என்று பிரபல பத்திரிகை தலையங்கம் எழுதியுள்ளதே?

! பிராந்திய உணர்வு பற்றி பிராந்திஅடையத் தேவையே இல்லை. ஒருவனுக்கு வீடு குடும்பம் வீதி நகரம் பிராந்தியம் தேசம் உலகம் என்ற விதத்தில்தான் படிப்படியாக மன வளர்ச்சி ஏற்படுகிறது. குடும்பங்கள் இன்றி தேசம் ஏது? தேசங்கள் இன்றி சர்வதேசியம் ஏது? பிராந்திய உணர்வு மன்னிக்க முடியாத குற்றம் என்பது போலப் பிரதமர் பேசுவதை இனியேனும் விட்டொழிக்கட்டும். குடும்பங்களில் நல்வாழ்வு மலர ஆவன செய்தால் தேசிய உணர்வு தன்னால் வளரும். முன்னதற்கு வழி செய்யாமல் பின்னதைத் திணிக்க முடியாது.

''நேத்து சிலுக்கு என்னோட கனவிலே வந்து...''
''என்னடா வருத்தத்தோட சொல்லுறே...''
''பின்னே, கீபுல் லாரி கட்டிண்டுன்னு வந்தாங்க.....''
—தங்க மனோகரன்



⌘ மருதநேவன், சென்னை-17

? சமீபத்தில் தங்களைச் சந்தோஷப்படுத்திய நிகழ்ச்சி பற்றி...,?

! இத்தாலியிலுள்ள டூரின் பல்கலைக்கழக சம்ஸ்கிருதப் பேராசிரியர் கொரேசியோ சுமார் நூற்றுப் பதினைந்து வருடங்களுக்கு முன் பதிப்பித்த வால்மீகி ராமாயணத்தின் ஏழு தொகுதிகளை இந்தியன் ஹெரிடேஜ் டிரஸ்ட் மறுபதிப்பு செய்துள்ளது. இந்த அறக் கட்டளையின் நிர்வாகிகள் ஹெச். டி. பரேக், ஜெயந்திலால் பரேக், சதானந்த். டி. எஸ். சந்தானம் ஆகிய தொழிலதிபர்கள். இரண்டு லட்ச ரூபாய் செலவில் மூன்று ஆண்டுகளில் கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் போல பிரசுரமாகியுள்ள நூல்களுக்கு விலை கிடையாது. ரூபாய் ஆயிரம் நன்கொடை (வருமான வரி விலக்கு உண்டு) தந்தால் புத்தகங்களைப் பெறலாம். இந்திய பாரம்பரிய இலக்கியச் செல்வங்களை வெளியிட அறக் கட்டளை ஏற்படுத்தித் தொழிலதிபர்கள் செயல் படுவதைக் காண அளவிட முடியாத ஆனந்தம் போங்கள்!

⌘ எம். செல்லையா, சாத்தூர்

? பெற்றெடுத்த குழந்தையை வளர்ப்பது, தத்தெடுத்த குழந்தையை வளர்ப்பது இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! முதல்வர் எம். ஜி. ஆர். தாம் பெற்றெடுத்த சத்துணவுத் திட்டம் என்ற குழந்தையைப் பள்ளி ஆசிரியர்கள் தத்து எடுத்துக் கொண்டு பராமரிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். அவர்களில் பலர் அதற்குத் தயாராக இல்லை. திட்டத்தை அறிவிக்கும் முன்னரே பள்ளி ஆசிரியர்களை அழைத்துப் பேசி அவர்களை இத்திட்டத்தைச் சுவீகரித்து உற்சாகமாக அமல்படுத்த முன் வருவது போல் சாணக்கியமாகச் செயல்பட்டிருந்தால் பள்ளி ஆசிரியர்களும் பெற்றெடுத்த குழந்தையாகவே இதனைப் பாவிப்பார்கள். இப்போதோ திட்டத்தை அமல்படுத்த 33,500 பேர் அடங்கிய பட்டாளத்தையே வேலைக்கு நியமிக்க வேண்டியிருக்கிறது.

⌘ மோக. இரத்தினசாமி, மோகனூர்

? ஒத்திப்போடவேண்டிய விஷயம் எது?

! தமிழ்ப் படங்களுக்கு வெற்றிப் போஸ்டர்கள் ஒட்டுவதை ஒத்திப் போடலாம். பத்தாவது நாள், பதினோராவது நாளுக்கே இப்போதெல்லாம் வெற்றிப் போஸ்டர்கள் போட ஆரம்பித்துவிடுகிறார்கள். இந்த சுவரொட்டி ஐடியா கேரளத்திலிருந்து வந்திருக்குமோ என்னவோ? அங்கு ஒரு படம் இரண்டு வாரம் ஓடினாலே வெற்றியாம்!

ரூ. 10 பரிசு பெறுபவர்:

★ ஒ. எஸ். உதயசேகர்,
21 / 32, மேலத்தெரு
தக்கலை 629 175

# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்



**ஜலதோஷத்தைப் போக்கலாம்**

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலைகனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

**ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்**

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களிலெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

**கோல்டரின் ஜலதோஷத்திற்கு மட்டுமே**

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்குகிறது—கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன.



ஜலதோஷத்தினால் பாதிக்கப் படும்போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

விசேட ஜலதோஷ மருந்து

CASBC-105-213 TAM

## அத்தியாயம் 2

விஸ்வநாதனை யாரோ உப்பால் கட்டிப் போட்டிருந்தார்கள். கடல் உப்பு. ஸ்படிகம் ஸ்படிகமாய் உறுத்தும் உப்பு. அவனை மல்லாக்க மணலில் தள்ளி இரண்டு இரண்டு கையாய் உப்பு எடுத்து அதில் கோலக் கோடு மாதிரி குறுக்கும் நெடுக்குமாய் அவனைக் கட்டியிருந்தார்கள்.

விஸ்வநாதன் கைகால்களை விரித்து வானம் பார்க்கக் கிடந்தான். அவன் உள்ளங் கைகளிலும் கால்களிலும் உப்பு வைத்து மணலோடு அறையப்பட்டிருந்தது. விஸ்வநாதனால் எழுந்திருக்க முடியவில்லை. தலையை மட்டுமே சிறிது உயர்த்த முடிந்தது. ஒவ்வொரு முறையும் தலையை உயர்த்தும் போது யாரோ பலமாய் அழுத்தி அவன் எழுந்திருக்கவொட்டாமல் செய்தார்கள்.. உப்புதான், உப்பு சக்தி தான் தன்னை இப்படி எழவொட்டாமல் செய்கிறது என்று விஸ்வநாதன் கண்டுகொண்டான். விடுபட பலமுறை முயற்சிசெய்தும் தடுக்கப்பட்டான். உப்புக்கு எதிராகப் போராட முடியாது. போராடுவது வீண். காற்று தலையைக் கலைத்தது. நாக்கில் உப்புக் கரித்தது.

பேசாமல் இப்படியே இ..ந்தால் என்ன? கிடப்பதும் ஒரு சுகம்தானே. எழுந்து என்ன இப்போது. எழும்பினால்தானே தள்ளுகிறார்கள். பேசாமல் இப்படியே இருந்தால்? யார் என்ன செய்ய முடியும்? காற்று வீசுகிறது. மணல் மிருதுவாய் இருக்கிறது. மௌனமாய்த் தூங்கிவிடுவோம், கண்ணை இறுக மூடி. என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும் என்று விட்டு விடுவோம்.

விஸ்வநாதனால் தூங்க முடியவில்லை. கட்டப்பட்டிருக்கிறோம் என்கிற நினைவே சிரமமாய் இருந்தது. கட்டு வலிக்கவில்லை. ஆயினும் ஒரு வேதனை படர்ந்தது.

முடியாதுன்னு ஒன்று உண்டா? முயன்று முழு வலிவோடு எழுந்து உடைத்துவிடவேண்டும். விஸ்வநாதன் மனத்தைக் கூர்மையாக்கி மூச்சை இழுத்து ஓவென்று கத்திக்கொண்டு எழுந்தான். காற்று பலமாய் அடித்தது. மேலே போடப்பட்டிருந்த உப்புக் கோடுகள் உடைந்தன. கைகளை உதற முடிந்தது. காற்று பலமாகி விஸ்வநாதனை அழுத்திற்று. ஏய்ய் என்று கூவிக் கொண்டு எழுந்தான்.

கனவு கலைந்து விட்டது.

விஸ்வநாதனின் கழுத்தைச்சுற்றித் தாரிணி கையைப் போட்டிருந்தாள். கனவு வேகத்தோடு எழுந்தபோது அவள் கை கழுத்தை விட்டு அகன்று மடியில் கிடந்தது. விஸ்வநாதன் அவள் கையை அப்புறப் படுத்தினான். எழுந்து வேஷ்டியைத் தேடினான். கால்பக்கம்



# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

சுருண்டு கொண்டிருந்த வேஷ்டியை உதறி உடுத்திக் கொண்டான். பின்பக்கம் போய் வந்தான். ஜிலீர் என்று குழாய் ஜலம் காலைத் தாக்கிற்று. தூக்கம் சுத்தமாய்ப் போய் விட்டது.

என்ன கனவு இது? உப்புக் கனவு. உப்புக் கோடாய்க் கட்டியிருக்கிற கனவு. அமைதியாய் நாற்காலியில் உட்கார்ந்து யோசிக்க மறுபடி கனவு முழுவதும் நினைவுக்கு வந்தது.

கழுத்தைச் சுற்றித் தாரிணி கையைப் போட்டிருக்கிறாள். புரள முடியாமல் கனமாய் அழுத்தியிருக்கிறாள். தலையை மட்டும் கனவில் தூக்க முடிந்ததே தவிர சுலபமாய் அசைய முடியவில்லை. உப்புக் கயிற்றில் கட்டப்பட்டுக் கிடந்திருக்கிறேன். உப்பு தாரிணியா? இவளிடமிருந்து விடுபடத் தான் கனவில் அத்தனை தவிப்பா?

விரும்பிக் கல்யாணம் செய்து கொண்டு விட்டு விடுபடப் பறப்பது என்ன நியாயம்? எல்லா ஆண்களும் கல்யாணம் சிறை என்று சொல்கிறார்களே அது போலவா நானும்? ஹாப்பி பேச்சிலர் லைஃப் என்று ஏங்குகின்ற கும்பல்தானா என் மனசும்? இங்கே பிரம்மச் சாரி 'வாழ்க்கையும் நரகம்தானே? மதிப் பில்லாத நிலைதானே?

'யப்பா காதலுக்கும் கல்யாணத்துக்கும் எப்படிப் பேயாப் பறந்தோம். இவளைச் சுற்றிச் சுற்றித் திரிந்து இவள் சம்மதம் பெற எப்படித் தவித்தோம்.'

காதலிப்பதை இப்போது செய்திருக்க வேண்டும். முப்பத்தி மூன்று வயதில் பதற்றம் அடங்கிய நேரத்தில் காதல் வாழ்க்கை துவங்கி யிருக்க வேண்டும். சராசரி தென்னிந்தியனுக்கு அனுபவ வளர்ச்சி குறைவுதான். பத்து வயசு மைனஸ்தான்.

விஸ்வநாதன் விடிவிளக்கு வெளிச்சத்தில் தூங்கும் தாரிணியை உற்றுப் பார்த்தான். வெறும் பாவாடையும் பிரித்து விட்ட ரவிக்கையுமாய், தாரிணி கலைந்து கிடந்தாள். இரண்டு பெண் குழந்தைகளுக் குப் பிறகும் மார்பும் இடுப்பும் தின்னென்றுதான் இருக்கின்றன. உதடு களும் கன்ன மேடும் உறுதியான முகவாயும் மனத்தைக் கிளறிவிடுகின்றன.

கனவு நனவு எல்லாம் மறந்து மறுபடி படுக்கையில் விழுந்து தாரிணியை இறுக்கக் கட்டிக்கொண்டு தூங்கலாமா?

ஆனால் இந்தப் படுக்கை ஆட்டத்தில் கூட ஈடுபாடில்லாமல் போய் விட்டது. தூங்கு வதற்காகத்தான் முயக்கம் என்று ஆகி விட்டது. இரண்டு குழந்தைகள் போதும் என்று தாரிணியே முடிவு பண்ணி விட்டாள். இரண்டாவது சிசேரியன் பண்ணுகிறபோது ஆபரேஷன் செய்து கொண்டு விட்டாள். உடம்பில் இரண்டு பேருக்குமே அடக்கம் போய் விட்டது. பல் தேய்க்கிற பழக்கம் மாதிரி இருட்டில் கைபட்டதும் முயக்கத் தவிப்பு வந்துவிடுகிறது.

கடன் போல நாள் தவறாது இரவில் மனைவியை அணைத்துக் கொள்ள வேண்டியிருக் கிறது. வேண்டிய சமயம் எது வேண்டாத சமயம் எது என்று தனக்கே பிடிபடாமல் இருக்கிறது. இவளுக்குத் தேவையோ என்ற அச்சத்தில் தன்னை இழக்க வேண்டியிருக் கிறது. இவளும் கடமையாய்ச் செய்கிறாளோ என்கிற கவலை வருகிறது. இதைக் கேட்டுக் கூட பார்த்தாகிவிட்டது.

தாரிணி பொய்யானவள். நிறைய பெண்கள் பொய்யானவர்கள்.

''உங்களுக்குச் சிரமமா இருந்தா தூங் குங்கோ'' என்று மனசை நசுக்கி விட்டு நகர்ந்து கொள்வாள்.

''எனக்கா சிரமமா?'' உள்ளே ஈகோ பொத்துக் கொண்டு கரை உடைக்கும். மனசுள் பேய் ஆடும்.

''ஆமாம். கொஞ்சம் தலையை வலிக் கிறது'' என்று அடங்கியும் இருக்கிறான்.

''தலைவலியா...ஏன் ரொம்ப வேலையா?'' இழுத்துத் தலையை உடம்பை அழுத்திப் பிடித்துவிட்டுத் தாரிணி வெறியேற்றி யிருக் கிறாள்.

ஒரு வேளை ஹாப்பி பேச்சிலர் லைஃப் என் பது இது தானோ. இதை மனசில் குறித்துக் கொண்டு தானோ?

கற்பனைக் கனவில், சினிமாவில், காதல் பாட்டுக்களில் உண்டான சுகம் நிஜத்தில் இல்லாததால் தானோ.

தேவையெனில் கனவு காணலாம். வேண்டாமெனில் அழித்து விடலாம். மன சுக்குப் பிடித்தவளை மனசுக்குப் பிடித்த விதத்தில் மனசுக்குள்ளேயே முயங்க லாம். வேண்டாமெனில் தூங்கலாம்.

கல்யாணம் என்பது ஒரு கௌரவம். சமூகக் கௌரவம். அரை நிக்கர் சௌகர்ய மென்று ஹாம் ஆபீசுக்குப் போட்டுக் கொண்டு போக முடியாது. முழு பேண்ட் தான் கௌரவம். ஆபீஸ் கௌரவம். பேண்டும் பூட்ஸும் வெறுப் பாகி விட்டன. கல்யாணம் மாதிரி கடனே என்கிற விதமாகி விட்டன.

ஆனால் பூட்ஸ் கூட வாங் கின புதிதில் எத்தனை



கர்வமாய் இருந்தது. நடக்கும் போதே ஒரு ஏக்க எண்ணமாய் வந்தது.

இப்போது பூட்ஸ், ஆபீஸ், கல்யாணம் எல்லாம் அலுப்பாய் இருக்கிறது. இவ்வளவு தானு. இதோடு வாழ்க்கை இவ்வளவுதானு என்கிற ஏக்கம் வந்திருக்கிறது.

இப்போது முப்பத்திநாலு வயசு. இன்னும் இருபத்தி இரண்டு வருஷம் வேலைக்குப் போக வேண்டும். மோட்டார் சைக்கிளை உதைத்து எட்டுப் பத்துக்குக் கிளம்பி எட்டு முப்பத்தி அஞ்சுக்கு ஆபீஸ் போக வேண்டும். வியாழக்கிழமை இரவே ஞாயிறு விடுதலை பற்றி ஏக்கம் கொள்ள வேண்டும். ஞாயிறு உபரி வேலை ஏதும் வராது இருக்கவேண்டுமே என்கிற கவலையோடு இருக்க வேண்டும்.

ஒரு வேளை இதுதான் உப்புக் கயிறோ? ஆபீஸ் வேலையும் நேரத்துக்குக் கட்டுப்பட்ட வாழ்க்கையும் தான் உப்புப் பிணையலோ பேண்ட்டும் பூட்ஸும் காகித ஃபைலும்தான் கட்டிப் போட்டிருக்கிறதோ.

ஆபீஸை உதறினால் வீடு உடைந்து போகும் வீடு உடையாமல் இருக்க ஆபீஸை உறுதியாய் பற்றிக் கொள்ள வேண்டும். நிறைய பேண்ட் வாங்கி ஜதை ஜதையாய் பூட்ஸ் வாங்கிக் கத்தை கத்தையாய் பைல் சுமந்து செத்துபோக வேண்டும்.

ஆனால் கனவில் உப்புக் கயிறு அறுந்து பொடிப்பொடியாயிற்று. அறுக்க முடியுமா என்றால்? இல்லை அறுக்க வேண்டும் என்கிற ஆசைதான் கனவாயிற்றா? கனவில்மட்டும் தான் அறுத்தல் சாத்தியமா?

அறுத்து விட்டு என்ன செய்ய.

மனசுக்குப் பிடிச்ச வேலையா செய்யணும். மனசுக்குப் பிடித்த வேலை என்ன?

பெட்டிக் கடை வைத்தல்.

சினிமா தியேட்டரில் டிக்கெட் கிழித்தல்.

இப்போதெல்லாம் அதிகம் சினிமா பார்க்கும் ஆசைவந்து விட்டது. வேலை பளுவை, தலைவலியை சினிமா பல நேரம் குறைத்து விடுகிறது. ஆங்கிலம் இந்தி தமிழ் என்று தென்பட்ட படத்துக்குப் போய் உட்கார்ந்து விடுவது சுகமாய் இருக்கிறது. ஒரேபடத்தை இரண்டு மூன்று முறை கூட பார்க்க முடிகிறது.

---

''ட்யூப் லைட்லே 'ரொய்ங்'னு சத்தம் வருதே அது என்ன மாமா?''

''அதான் லைட் ம்யூசிக்!''

—இளை அ. கதிர்வேல்



பனிவிழும் மலர் வனம் - உன்
பார்வை ஒரு வரம்

இந்தப்பாட்டு சிக்கென்று மனசில் பிஜிஎம் மோடு பதிந்துவிட்டது. படம்பார்த்து விட்டு வருகையில் வேறு கதாநாயகனைப் போட்டு இந்தப் பாட்டை தனக்குள் ஒளிப் பதிவு செய்தாகி விட்டது. படத்தில் வரும் காதல் அசைவுகளை விடத் தன் ஒளிப் பதிவு திறமையாய் இருப்பதைப் போல் பட்டது. கதாநாயகனே இல்லாமல் வெறும் பெண்ணைமட்டும் வைத்து இதைப் படமாக்க வேண்டும், என்று தோன்றிற்று.

தனக்குப் பிடித்த சினிமா பாட்டுகளைப் போட்டு மனசுக்குள்ளேயே ஒரு படம் தயாரித்தான். மோட்டார் சைக்கிளில் போகும்போதெல்லாம் சினிமா படம் எடுத்தான். யார் யாரோ செய்யறாங்க என்றால் முடியாதா? முதல்ல சின்னதா ஒரு பிலிம், ஆர்ட் பிலிம் ஒரு ரீல் பிலிம் பண்ணி பார்க்கணும். பத்துப் பேர் பிலிம் பண்ணிப் ஒரே டைட்டில்ல ஓடணும். அப்புறம் முழுசா ஒரு பிலிம் பண்ணணும்.

இப்போ பிலிம் இண்டஸ்டிரில நுழைய முடியுமா? இருபது வயசுல நுழைஞ்சிருக்கணும். இன்னிக்கு இருக்கிற முதிர்ச்சி இருபது வயசுல இருந்திருந்தா நுழைஞ்சிருப்போம். இன்னி தேதிக்குக் கொடி கட்டிப் பறந்திருக்கும்.

இனி வரும் முனிவரும்
தடுமாறும் கனி மரம்

இரண்டு கைகளை விரித்துப் புறங்கைகள் முகத்துக்கெதிரே வைத்து விரித்த வலது, இடது கட்டை விரல்களை இணைத்துக் கைகளுக்கு நடுவே தென்பட்ட சதுரத்தில் தாரிணியைப் பார்த்தான்.

யப்பா...தாரிணி இப்போது எழுந்து நின்றால் வெள்ளைப் பாவாடையும் பிரித்த சட்டையுமாய் எழுந்து நின்றால்

இனிவரும் முனிவரும்
தடுமாறும் கனிமரம்

டைட் க்ளோசப். பிறகு மெல்ல ஸூம், பேக். தாரிணி வெட்கப்பட்டு சிரி, சட்டென்று அசால்டா தலையை உயர்த்து. வெல் தேர் யூ ஆர். டு இட் அகெய்ன். தாரிணி குனிந்து நிமிர்ந்து குழல் பறக்க மார்பு குலுங்கச் சிரித்தாள். தாரிணி மறுபடி சிரிக்க விஸ்வநாதன் வாய் விட்டுப் பேசினான். ''ஒடுங்காத தாரிணி.'' தாரிணி புரண்டு மல்லாந்தாள். சட்டென்று சிலிர்த்துக் கொண்டாள். இவனுக்காய்த் துழாவினாள். ''என்ன பால் வந்துடுத்தா'' என்று விழி பிரிக்காமல் கேட்டாள்.

''இல்லே''

''எங்க இருக்கேள். நாற்காலிலியா. இங்க வாங்கோ. முகம் பார்க்கணும்.''

அவன் எழுந்து தாரிணி அருகில் போனான். கை நீட்டி அவனைத் தடவி முகத்துக்கெதிரே விழிகளை விரித்தாள்.

''மணி என்ன?''

''நாலு பத்து''

''ச்சே போ. இப்ப எழுந்து என்ன செய்றேள். கட்டிக்கோங்க.''

விஸ்வநாதன் பணிந்தான்.

''தூக்கம் வரலேயா. அசதியா. விடிகார்த் தால எழுந்துட்டேன். உலுக்கி உலுக்கி எழுப்பணுமே உங்களே.''

விசுவநாதன் பதில் பேசாது இருந்தான்.

''ஆபீஸ் ஞாபகமா?''

விடுவித்துக்கொள்ள முயன்றான். இன்னும் சற்று நேரம் நிம்மதியாய் டைரக்ட் செய்து கொண்டிருக்கலாம். கெட்டுப் போயிற்று.

''என்ன நகர்ந்து நகர்ந்துபோறது..என்ன கஷ்டம்? ஆபீஸ் கவலேயா?''

இவள் ஆபீஸ் ஆபீஸ் என்கிறபோதெல்லாம் விஸ்வநாதனுக்கு வயிறு கலவரப்பட்டது. ஐயோ என்று கத்த வேண்டும் போல் இருந்தது.

''விடு. எனக்குத் தூக்கம் வரது.''

''என் தூக்கத்தைக் கலேச்சுட்டு நீங்க தூங்கறது என்ன அர்த்தம்?'' தாரிணி திரும்பி விஸ்வநாதனே இறுக்கிக் கொண்டாள். மார்பை வருடினுள். கன்னத்தைக் கடித்தாள். விஸ்வநாதன் மனசை மறுபடி கூட்டிப் பனி விழும் மலர் வனம்... உன் பார்வை ஒரு வரம் என்ற வரிக்குப் படம் பிடிக்க ஆரம்பித்தான்.

''இது வைரமுத்துவா ரொம்ப நன்னு இருக்குல்ல கேக்கறதுக்கு!''

''என்னது''

''இப்ப நீங்க பாடுன பாட்டு.''

''உனக்குக் கேட்டுடுத்தா?''

''சத்தமாத்தானே பாடினேள்?''

விஸ்வநாதன் வாயை இறுக மூடிக்கொண்டான்.

''குளிரலே உங்களுக்கு?''என்றுகேட்டாள்.

குளிர்ந்தது. குளிருக்கு இதமாய் உடம்பு தேவைப்பட்டது. விஸ்வநாதன் சட்டென்று மனகக்கேமிராவை க்ரேனுேடு அறைமூலேக்கு அனுப்பினுன். தன்னேயும் தாரிணியையும் வைத்துப் படமெடுக்க ஆரம்பித்தான்.

மேலே கவிழ்ந்த தாரிணியின் உதட்டை நிமிண்டி

பனிவிழும் மலர்வனம் — உன்
பார்வை ஒரு வரம்''

என்று பாடினுன். தாரிணி இறங்கினுள்.

விஸ்வநாதன் கேமிரா அறை முழுக்க நகர்ந்தது. ஸூம்... ஸூம் பேக் எல்லாம் செய்தது. அவர்கள் முயக்கத்தைப் பல கோணங்களில் படமெடுத்தது.

''அப்பா... கொள்ளே ஆசை எம் மேல. சும்மாவானுலும் விடு... நகர்ந்து போன்னு டூப் அடிக்கிறது. பால் வந்தா எழுப்புங்கோ. எட்டு மணிக்கு ஆபீஸ் போகணுமில்லேயா?''

விஸ்வநாதனுக்குத் தன் ஆசைகள் எதுவும் உறுதியாய் இல்லே என்பது நினேக்க நினேக்க வலித்தது. தூக்கமும் அலுப்புமாய்க் கண் சொருகிற்று.

டெலிபோன் கலேத்தது.

''குட் மார்னிங். ஒன் செகண்ட். இதோ கூப்படறேன்.'' தாரிணி குரல் கேட்டது.

இது ஆபீஸ் போன் கால். யார்? இந்த ஆறு மணி காலேயில் யார்?

''புத்தூர்கிட்ட உங்க ஆபீஸுக்கு வர வேண்டிய ஒரு லாரி மாட்டிடுத்தாம். உங்க மானேஜர் கூப்பிடறார். என் குரல் கேட்ட வுடனே குட்மார்னிங் மேடம்கிறார். ஆபீஸ்ல வேலே பண்றவா மரியாதையே தனி.''

தள்ளாடியபடியே விஸ்வநாதன் டெலிபோனுக்கு அருகே போய் ''குட்மார்னிங்'' என்றான்.

அது அன்றையமுதல் குட்மார்னிங். அன்று முழுக்க அவன் நிறைய குட்மார்னிங் சொல்ல வேண்டியிருந்தது. (தொடரும்)




ரொம்ப வருஷங்களுக்கு முன்னல் என் தந்தை ஒரு 'பிட்மன்' ஷார்ட் ஹாண்ட் டிக்ஷனரி வாங்கினுர். பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட வார்த்தையை எப்படி எழுதுவது என அறிய டிக்ஷனரியைப் புரட்டியபோது தான் அதில் 32 பக்கங்கள் இல்லாதது தெரிய வந்தது. பம்பாயிலிருந்த பிட்மன் புத்தகங்களின் விற்பனேயாளருக்கு ஒரு கடிதம் போட்டார் என் தந்தை.

நான்கு நாட்களுக்குப் பின் ''குறைபாடுள்ள டிக்ஷனரியைத் திருப்பி அனுப்புங்கள்'' எனத் தபால் வந்தது.

புத்தகத்தை என் தந்தையார் ரிஜிஸ்டர் தபாலில் பம்பாய்க்கு அனுப்ப, புத்தம் புதிய பிட்மன் ஷார்ட்ஹான்ட் டிக்ஷனரி பம்பாயிலிருந்து வந்தது.

மேலும் நாலு நாள் சென்று பம்பாய் கம்பெனியிலிருந்து பதினுன்கணுவுக்கு ஒரு மணியார்டர் வந்தது. 'பக்கம் குறைந்தடிக்ஷனரியைத்தபாலில் அனுப்பியதற்கான பணம்' என எழுதியிருந்தனர்!

**லிஸ்ஃபோ சர்மாவின் மகன்**
**வரதன் கூற, சேலம்மா.**



**கோ**புர வாசலில் கூட்டம் குறைந்திருந்தது. ஆற்றுக்கு எதிர்த்த தோப்பில் நாரைக் கூட்டம் ஒன்று வரிசைகளை மாற்றி மாற்றிப் பறந்து கொண்டிருந்தது. தெப்பக் குளத்தை ஒட்டிய சுவரில் திரைப்படப்போஸ்டர்கள் அலங்கரித்தன. கிருஷ்ணா காப்பி கிளப்பின் சர்வர்கள் நாளிதழ் படித்துக் கொண்டிருந்தார்கள். அரசமரத்தடிப் பிள்ளையார்கூட எழுந்துபோகலாமா என்று யோசிப்பது தெரிந்தது. வெள்ளிக் கிழமை நாலு பேர் அதிகம் வருவார்கள். இன்று அதுகூடத் தேறவில்லை என்று சிவசு வருத்தப்பட்டார்.

கோயில் சோகையடித்தாற்போல் இருந்தது.

சிவசு மட்டும் இல்லை, அவர் அப்பா, தாத்தா என்று மூன்று தலைமுறையினரும் இந்தக் கோயில் முன்தான் வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது. இருக்கிறது. 'தாத்தா சுண்டல் விற்றார். முன்னேறினார். அந்த முன்னேற்றத்தை வேராக வைத்து அப்பா காப்பி கிளப் வைத்து ஒரு முப்பது வருஷ காலத்தை ஓட்டினார். அப்புறம் சிவசு தொடர்ந்தார். ஆனால் இரண்டு வருஷம் கூட முடியவில்லை. சுண்டல் விற்க ஆரம்பித்து விட்டார்.

தாத்தா காலத்துக்கு முன்பே, இந்த ஊரே சுண்டலுக்குப் பெயர் பெற்றதுதான். அவர் தாத்தா அதை அழுத்தமாக ஸ்தாபித்திருந்தார். ஆகவே சிவசுக்கு அந்தப் பக்குவம் இயல்பாகவே கைவந்திருந்தது. ஒரு நாளைக்கு இருபது இருபத்தைந்து ரூபாய் வருமானம் கிடைத்தது. ஆனால் இப்போதைய ஜனங்

# சிவசுக்கு

களுக்குச் சுண்டலின் ருசியை உணர மனசில்லை. சாமியைத் தரிசிக்க வந்தவன் தெப்பக் குளத்துக்கு முன்பிருக்கும் சினிமாப் போஸ்டர்களை நின்று பார்த்து ரசிக்க ஆரம்பித்த பின்; ஊர் உருப்பட்டாற்போலத்தான் என்று சிவசு வேதனைப்பட்டதற்குத் தகுந்தாற்போல, இந்தத் தர்மகர்த்தா வந்தான். கோயில் காம்பவுண்டைச் சுற்றிக் கடைகள் கட்டி விட்டான். கோயிலின் புனிதத்திற்கும் அதன் காரியங்களுக்கும் சம்பந்தமே இல்லாத கடைகள் வந்து விட்டன.

இந்த லட்சணத்தில்அலுமினியத் தூக்கும், மூங்கில் கூடையும், சுருண்ட இலைகளுமாய், கணுக்கால் வரை கட்டிய அழுக்கு வேட்டியும், கை வைத்த காடா பனியனுமாய், யார் சுண்டல் வாங்குவார்கள் என்ற ஏக்கப் பார்வையுமாய், கால் தேய அலையும் சிவசுவை யார் மதிக்கிறார்கள்.?

அவருக்கு ரெண்டு பசங்கள், ஒரு பெண் குழந்தை. மூன்று பேரும் படித்துக்கொண்

டிருக்கிறார்கள். பார்த்தாலே அறிவின் ஜுவாலை முகத்தில் தெரியும் குழந்தைகள். அந்த சந்தோஷம்தான் இப்படி அலைந்தாலும் ஒரு மனத் திருப்தியை உண்டு பண்ணிற்று....ஆனதாகட்டும் என்று இந்தச் கண்டல் கூடையை எறிந்து விட்டு, சமையல் மகாதேவன் தனக்கு அஸிஸ்டெண்ட்வேணும் என்றான்: அவனுடன் கல்யாணம், கார்த்திகை என்று கிளம்பிவிட வேண்டும். ஒரு கல்யாணத்துக்குக் குறைந்தது எல்லாம் போக இருநூறு ரூபாய் கிடைக்கிறது என்றான் மகாதேவன்.

பேசாமல் நாளைக்கு அவன் கூடப் போய் விட வேண்டியதுதான்.

மத்தியான வெயில் உடம்பின் வேர்வையை வெள்ளமாய் வெளிக் கொணர்ந்தது. அரச மரத்துச் சலசலப்பில் காற்று கொஞ்சம் இதமாய் வந்தது. உட்கார்ந்து பார்த்ததில் கண் அசருகிறாப்போல இருந்தது. வீட்டின் முன் அறையை ஒட்டிய தாழ்வாரத்தில் மனைவி கிழிந்த துணிகளைத் தைப்பது போன்ற



# வாழ்வு ஒரு வெள்ளி

பிரதிபா ராஜகோபாலன்

ஒரு கனவோ ஒரு பிரமையோ மின்னலடித்தாற்போல் எழுந்தது. 'சீ, இதென்ன தூக்கம்' என்று உதறிக் கொண்டு எழுந்தபோது இளையவன் நின்று கொண்டிருந்தான்.

''என்ன அப்பூ?''

''அம்மா கூப்பிட்டாப்பா,''

''என்ன சமாசாரம்?''

''சித்தப்பா வீட்டுக் கல்யாணத்துக்குப் போக வேண்டாமான்னு கேட்டாப்பா.''

சிவசுக்கு அப்போதுதான் இந்த விஷயம் முதுகுத்தண்டில் தூண்டில் போட்டாற்போல் உறைத்தது.

கூடப் பிறந்தவன் இவன் ஒருத்தன்தான். அக்கா, தங்கை கூடக் கிடையாது. அப்பா, இளையவன் என்பதால் நிறையச் செல்லம் கொடுத்தார்.

''கெடுத்தது பூரா அப்பாதான். சின்ன வயசுல்லயே ஸ்கூலுக்கு மட்டமடிப்பான். ஒரு நாள் வீட்ல இருந்த நாலஞ்சு வெள்ளி டம்ளர்களை எடுத்துண்டு போனவன்தான். ஏழு வருஷம் கழிச்சுத் திரும்பினான். ''இங்கிருந்து பாம்பே போனேன். ரெண்டு வருஷம் கஷ்டப்பட்டேன். கள்ளக் கடத்தல்ல ஈடுபட்டேன். தொழில்ல புதுசா இருந்ததால போலிஸ்ல மாட்டி ஒரு வருஷம் ஜெயில்ல இருந்தேன். விடுதலை ஆனப்புறம் அதிலேயே துணிச்சலா எறங்கிட்டேன். ஒரு கொங்கிணிப்பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிட்டேன். பெண் குழந்தை ஒண்ணு ரெண்டு வயசுல இருக்கு. இனி என்னைப் பத்திக் கவலைப்படாதே. உனக்கு இளப்பு சரியில்லேன்னு கேள்விப்பட்டேன். பேசாம எங்கூட வா. ரெண்டே வருஷத்துலே லட்சாதிபதியாக்கிடறேன்''னு வார்த்தைகளை வாணமாய்ப் பொழிஞ்சான். ''வேண்டாண்டா சாமி. நீ சௌக்கியமா இருந்தாச் சரி. நம்ம பரம்பரை ஏழையா இருந்தாலும் பணக்காரராயிருந்தாலும் மனசிலேயும் வாக்கிலேயும் சுத்தமான பரம்பரை. அதுல வந்த நீ. தேசத் துரோகக் காரியங்கள்ல ஈடுபடறது எனக்குப் புடிக்கலே. உன்னைத் தம்பின்னு சொல்றதே எனக்குப் பிடிச்சமானதில்லே''ன்னு.... நான் பொரிஞ்சதும் அவன் சர்வ அலட்சியமா என்னைப் பார்த்து விட்டுப் போய்விட்டான். பிரம்மாண்டமான கார் என்ன, பட்டு வேஷ்டி என்ன, சென்ட் வாசனை என்ன, கழுத்துல சங்கிலி என்ன, கூப்பிட்ட தோரணை என்ன? கூடப் பிறந்த அண்ணு வாச்சேன்னு ஒரு மரியாதைஉண்டா, ஒரு பாடமுண்டா? ம்.... அவன் வீட்டுச் சமையல்காரனைக்கூப்பிடற மாதிரி கூப்பிட்டான்'' என்று, சந்தானம் சிவசுவை அழைத்த தினத்தில் கோயில் குருக்களிடம் சிவசு வருத்தப்பட்டுக் கொண்டார்.

கூடையைத் தூக்கிக் கொண்டு வீடு அடைந்து முன் தாழ்வாரத்தில் நுழையும் போது, மனைவியும் குழந்தைகளும் நிஜமாகவே கிழிந்த துணிகளைத் தைப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

''என்ன அம்புஜம், இந்தப் பயல் வீட்டுக் கல்யாணம் நெஜமாவே மறந்துடுச்சே!'' என்று பாதி வருத்தமும், பாதிச் சிரிப்புமாய்ச் சிவசு சொன்னதும், அம்புஜம் தலை நிமிர்ந்தாள்.

''உங்களுக்கு மட்டும் மறந்திருக்கும். ஆனா, ஒலகமெல்லாம் ஞாபகம் வெச்சுப் போயிட்டிருக்கு. கல்யாண மண்டபம் அவ்வளவு அழகாச் சிங்காரிச்சிருக்காம். இப்பவே நிறையக் கார்கள் வந்திருக்காம்.''

சிவசுவுக்கு எரிச்சல்தான் வந்தது.

''ஏண்டி, அவன் கவர்மெண்டுக்குத் துரோகம் பண்ணிக் காசு சேர்த்துக் கோமுட்டியாக இருக்கான். என்னைப் போல கண்டால் வித்தா இப்படிக் கோலாகலமாக் கல்யாணம் பண்றான்? உன் வாயை மூடிட்டுச் சீக்கிரமா பொறப்படற வழியைப் பாரு. டேய் அப்பூ. அண்டாவுல ஜலம் இருக்கான்னு பாரு. குளிச்சிடறேன்'' என்றவர், தம் பனியனைக் கழற்றலானார்.

''இதோ பாருங்க, நான் உங்களைக் குறை சொல்லல்லே. தாஜ்மகால் அழகுன்னு சொல்லலாம். அதுக்காக அங்கே படுத்தே தூங்க முடியுமோ? குடித்தனம்தான் பண்ண முடியுமோ? கல்யாண மண்டபத்துல நடக்கறதைச் சொன்னேன். எனக்குக் கூட வரணும்னுதான் ஆசையா இருந்தது. ஆனா இந்தக் கோலாகலத்தைக் கேள்விப்பட்டபின்னால, அங்கே நானும் கொழந்தைகளும் வர்றது உங்க தம்பிக்கு ரொம்பக் கௌரவக் குறைச்சலா இருக்கும். நீங்க போயிட்டு வாங்க... என்ன இருந்தாலும் பொண்ணுக்குப் பெரியப்பா....''

அம்புஜம் தைத்து முடித்த புடவையைத் தூக்கி, வெளிச்சத்தில் வைத்துப் பார்த்துத் திருப்தி அடைந்தாள்.

''ஒரு நாளைக்காவது நல்ல சாப்பாடாச் சாப்பிடுங்க. மகாதேவன்தான் சமையல். கொழந்தைகளுக்கு ரெண்டு பலகாரமாவது வாங்கிண்டு வாங்க.''

சிவசு மௌனமாக அவளையே பார்த்தார். மனைவியின் முடிவையும் வேண்டுகோளையும் தொடர்ந்து நிறையப் பேசலாம். ஆனால் ...து அவசியமில்லை. இன்னும் மௌனம் உறையக் கிணற்றுப் பக்கம் போய்க் குளித்து விட்டு வந்தார்.

''நல்ல வேஷ்டி ஏதாவது இருக்கா அம்புஜம்?''

**யானையின் தற்கொலை**

காட்டில் யானைகள் இறந்து கிடப்பதை யாரும் பார்க்க முடியாது. வயது முதிர்ந்த யானை தள்ளாமை காலத்தில் 'வாழ்ந்ததுபோதும். இனி இருந்து பயனில்லை' என்று நினைத்து விட்டால் புதை மணல் உள்ள சதுப்பு நிலம் நோக்கிப் பயணமாகுமாம். யாரும் அறியா வண்ணம் புதை மணலுக்குள் இறங்கித் தற்கொலை செய்து கொண்டுவிடுமாம்.

—பொன்மலை பரிமளம்



"போன மாசம் உங்கப்பா தெவசத்துக்கு வெச்சுக் கும்பிட்டமே அந்தவேஷ்டிஇருக்கு. கட்டிண்டு போங்க."

"வருஷத்துக்கு ஒரு தடவையாவது தெவசம் வருது. அப்பா மேல இருக்கிற மரியாதையால கஷ்டப்பட்டு ஒரு வேஷ்டி-துண்டு எடுத்துடறோம். இல்லேன்னா, நம்ம தரித்திரத்துக்கு நாமாகவே எங்க வேஷ்டி எடுக்கறோம்" என்று சொல்லிவிட்டு அந்த வேஷ்டியை உடுத்தி. இருப்பதிலேயே நல்ல சட்டையை அணிந்து வெளியே வந்தார்.

கல்யாண மண்டபத்துக்குள் நுழைந்து ஒரு மணி நேரம் வரைக்கும் சிவகுக்குப் பிரமிப்பு நீங்கவில்லை. அவரை வரவேற்க ஆளும் இல்லை. அந்த இடத்தின் கோலாகலத்துக்கும் பெரிய மனிதர்களின் வருகைகளுக்கும் நடுவே ஒரு முரண்பாடு போல, தவிர்த்துவிட வேண்டும் என்ற உறுதியோடு சிவகுவின் மேல் அத்தனை பேர் பார்வையும் அந்நியத் தன்மை கொண்டன.

நான் வந்திருப்பதைத் தம்பி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலில், சிவகு, அவனைக் கண்டு பிடித்து, அவனைத் தொடர்ந்து, மாப்பிள்ளை தங்கும் அறைக்குப் பக்கத்தில் தயக்கமாகச் சந்தித்தார்.

"சந்தானம்" என்று அவனை மெல்லிய குரலில் அழைத்தபோதே வார்த்தைகள் பயந்துகொண்டன.

சந்தானம் அந்த அழைப்பில் சற்று ஆச்சரியமுற்றுத் திரும்பினான். திரும்பியவனுக்குத் தன் அண்ணனின் வருகை சந்தோஷத்தை உண்டாக்கியிருக்கவேண்டும். ஆனால் அவனுக்கு அருவருப்புத்தான் விளைந்தது.

உனக்குஇந்த வேட்டியும்சட்டையும்தானா கிடைச்சுது? கண்டல் விக்கிற ஆளு என்னோட அண்ணன்னு தெரிஞ்சு, ரொம்பப் பேரு கேக்கறதைப் பார்த்தா நாக்கைப் புடுங்கிச் சாகணும் போல இருக்கு. இப்ப இந்த அலங்காரத்துல வந்திருக்கே. இத்தனை வருசம் பொழைச்சு, சந்தைல விக்கிற இந்த வேட்டியும் சட்டையும்தானா கெடைச்சுது..."என்று சந்தானம் வார்த்தைகளை எறிய எறிய அதை எதிர்பார்க்காத சிவகு அதை ஏற்றுக் கொண்டு சொன்னார்.

"சந்தானம்...இந்தச் சட்டையும் வேட்டியும்தானா கெடைச்சுதுன்னுஅழுத்தி அழுத்திக் கேக்காதே. என் சம்பாத்தியத்துக்கு இதுதான் கெடைக்கும். என்னால உனக்கு அகௌரவம்னா, நான் இந்த செகண்டுல போயிடறேன். உன் மகள் கல்யாணத்துக்குக் கூடப் பொறந்த அண்ணன் வந்திருக்கேன். வாங்கண்ணா. அண்ணி வரலையா, கொழந்தைங்க வரலியான்னு உனக்குக் கேக்கத் தெரியலே! சட்டை மோசம்,வேட்டி மோசமின்னு முகத்தைச் சுளிக்கிறியே? நான் அம்மணமாவா வந்திருக்கேன்? நான் உன்னைவிட ஏழையா இருக்கலாம். கண்டல் விக்கிறவனா இருக்கலாம். ஆனா உன்னைவிடத் தன்மானம் எனக்கு நிறைய இருக்கு. என் வீட்டுல கல்யாணம் நடந்தாக் கண்டல்காரன் வீட்டுக் கல்யாணம்னு ஊர் சொல்லும். ஆனா உன் வீட்டுக் கல்யாணத்தைக் குறிச்சு ஊர் என்ன சொல்லுது தெரியுமா? கள்ளச் சாராயக்காரன் வீட்டுக் கல்யாணம், கள்ளக் கடத்தல்காரன் வீட்டுக் கல்யாணம்னு. ஏண்டா, நீ கௌரவமானவனா, நான் கௌரவமானவனா? ச்சீ, நாயே உன் அழைப்புக்கு நான் வந்தேன் பாரு..." என்று சிவகு காறித் துப்பிவிட்டு நிதானமாகப் படி இறங்கி வெளியேறினார்.

வீட்டை அடைந்தபோது பெண் குழந்தை ஓடிவந்து, "என்னப்பா பைல ஒண்ணும் காணலியே?பட்சணம் எங்கேப்பா?" என்று ஆர்வத்துடன் கேட்டு,அழுகையைத்தொடங்கினாள்.

"அந்த நாய் வீட்டு பட்சணத்தைச் சாப்பிட்டா நமக்கும் அந்த புத்தி வந்துரும்மா" என்று சமாதானம் செய்யத் தொடங்கினார். அவர் குரல் கேட்டு அம்புஜமும், பையன்களும் வந்து விவரம் தெரியாமல் முகத்தில் கேள்வியுடன் நின்றார்கள்.

"டேய், நீங்க நல்லாப் படிச்சு நெறையச் சம்பாதிச்சு, நேர்மையாமுன்னுக்கு வரணும். புரிஞ்சுதா?" என்று பையன்களைப் பார்த்துச் சொன்னதும், அப்பா சொல்வது என்றைக்கும் சரியாக இருக்கும் என்ற நம்பிக்கையின் உண்மையில் இருவரும், "புரிஞ்சுதுப்பா" என்று வார்த்தையாலும் மனசாலும் ஆதரித்தார்கள்.

"போன காரியம் என்னாச்சு?" என்று அம்புஜம் தவிப்புடன் கேட்டாள்.

"சொல்றேன்,சொல்றேன்"என்றார் சிவகு நிதானமாய்.



**சோறு**

'சோழ வள நாடு சோறுடைத்து' என்று அவ்வையார் பாடியிருப்பது அனைவருக்கும் தெரியும். சோழ நாட்டில் நெல் அதிகம் விளைவதனால் இப்படிப் பாடியதாக நாம் நினைக்கிறோம் அல்லவா? ஆனால் உண்மையான பொருள் என்ன தெரியுமா? சோறு என்றால் முக்தி என்று பொருள். அந்த மோட்சத்தைத் தருகின்ற கோயில்கள் அதிகமாகச் சோழ நாட்டில் இருப்பதனால்தான் அவ்வையார் அப்படிப் பாடினார்.

திருமுருக கிருபானந்த வாரியார்

கூறக் கேட்டவர்:

என். எஸ். முத்துகிருஷ்ண ராஜா

# 'வீடியோ' வரை காத்திரு! 2

கதை: ஜே.எஸ்.ராகவன் - சித்திரம்: செல்லம்















# ஆசை ஆசை ஆசை

## பட்டுக்கோட்டை ராஜேஸ்

### 1

"நீங்க செஞ்ச உதவிக்கு ரொம்ப நன்நிங்க ஐயா!"

"இதுலே என்னங்க தம்பி? நான் உங்க குடும்பத்துக்கு ரொம்ப கட்டுப் பட்டவனுங்க."

"கட்....கட்....கட்" எரிச்சலும் கோபமும் கலந்த குரலில், "ஏன்யா வசனத்தை மாத்துறே? கட்டுப்பட்டவன் இல்லே.... கடமைப்பட்டவன்னு சொல்லுய்யா. அவுட்டோருக்கு வந்து இப்படி ரீ-டேக் எடுத்துக்கிட்டே இருந்தா உருப்பட்டா மாதிரிதான்."

கதாநாயக நடிகருக்கு உடனே ஒருவன் ஓடிவந்து குடை நிழல் தந்தான்.

மேக்கப்மேன் வந்து ஒரு கண்ணாடியை நடிகரின் கையில் கொடுத்துவிட்டு முகத்தை 'டச்சப்' செய்து கொண்டிருந்தான்.

டைரக்டர் அவனிடம் வந்து. "அண்ணே! நீங்க பிரமாதமாச் செய்யும்போது அவன் வசனத்தைத் தப்பாச் சொல்லிக் கெடுத்துட்டான்" என்று அவனிடம் குழைந்தார்.

பெருமிதமான புன்னகையைப் பதிலாக்கிவிட்டு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டான்.

சற்றுத் தூரத்தில் வெண்மையாய் அருவி வீழ்ந்து கொண்டிருந்தது.

பிரபலமான கதாநாயக நடிகர் என்பதால் ஷூட்டிங் பார்ப்பதற்கு ஏராளமான கூட்டம் வந்து சூழ்ந்திருந்தது.

காவல் துறையினர் வந்து கூட்டத்தைக் கட்டுப்படுத்திப் படமெடுக்க உதவி செய்து கொண்டிருந்தனர்.

டைரக்டர், "என்ன ரெடியா? கேமிரா? ஸ்டார்ட்... ஆக்ஷன்" என்றார்.

"ஶ்ரீயேடிவ் புரொடக்ஷன்ஸ்... புரொடக்ஷன்நம்பர்ஒன்... செவன் ஃபிஃப்டீன்... டேக் டூ." 'டக்'கென்று க்ளாப் அதிர்ந்தது.

டேக் ஓ.கே. ஆகியது.

"பேக்-அப்."

டைரக்டர் குரல் கொடுத்தார்.

ஷூட்டிங் சாமான்களை வேனில் ஏற்ற ஆரம்பித்தனர்.

டைரக்டரும், புரொடக்ஷன் மானேஜரும் போலீஸாருக்கு நன்றி கூறிக்கொண்டு மரத்தடியில் அமர்ந்திருக்கும்சப்-இன்ஸ்பெக்டர் சங்கரிடம் வந்தார்கள்.

இளமைத் துடிப்புடனும், நல்ல சிவந்த நிறத்துடனும் கம்பீரமாகக் காணப்பட்டார் சங்கர்.

"மூணு நாளா நீங்க தந்த ஒத்துழைப்புக்கு ரொம்ப நன்றி" என்றார் புரொடக்ஷன் மானேஜர்.

"நாங்கமட்டுமில்லே. இனிமேட்டுந்தான் உங்களுக்கு ஒத்துழைப்புத் தந்திருக்கு" என்றார் சிரித்தபடியே.

"ஆமாமாம். இல்லாட்டி ஒழுங்கா ஷூட்டிங் எடுத்திருக்க முடியாது. எக்கச்சக்கமான பணம் வேஸ்டா யிருக்கும்" என்றார் டைரக்டர்.

"எல்லாம் முடிஞ்சிடுச்சா?"

"இங்கேஎடுக்க வேண்டியதெல்லாம்முடிஞ்சிடுச்சு. இன்னும் கொஞ்சம் மெட்ராஸ்லேயும் கொடைக்கானல்லேயும் எடுத்துட்டா படம் முடிஞ்சிடும்."

ரசிகர்களுக்கு ஆட்டோகிராப் போட்டுக் கொண்டிருந்தார் கதாநாயகர்.

ஷூட்டிங் யூனிட் கிளம்புவதற்குத் தயாரானது.

கார்களும் வேனும் குற்றாலத்தை விட்டுப் புறப்பட்டன.

சங்கர் தம் பைக்கை ஸ்டார்ட் செய்தார்.

### 2

காவல் நிலையம்.

பைக்கை நிறுத்திவிட்டு உள்ளே நுழைந்தார் சங்கர்.



எஸ். ஐ. முன்னால் ஒருவர் நின்றார்.

''நான் எஸ். ஆர். தியேட்டர்லே மானேஜரா இருக்கேன். என் பேரு மாணிக்கம். முந்தாநாளும் நேத்துக் கலெக்ஷனெல்லாம் எண்ணும்போது ரெண்டு ரூவா நோட்டுலே கள்ள நோட்டு இருந்திச்சு... முதலாளி ஊர்ல இல்லே.... அவரு வந்ததும் அவருகிட்டே சொல்லுவோமேன்னு சும்மா இருந்துட்டேன். ஆனா நேத்து மூணு ரெண்டு ரூவா இருந்துச்சு. இனிமே சும்மா இருக்கிறது சரியில்லே... பின்னாலே ஏதாவது விவகாரமாயிடப் போவுதுன்னுதான் முதலாளி இல்லாட்டியும் பரவாயில்லேன்னு விவரத்தைச் சொல்லிட்டுப் போகலாமுன்னு வந்தேன்.''

''அந்த நோட்டெல்லாம் கொண்ணாந்து இருக்கீங்களா?''

''இதோ...இந்தாங்க.''

பேண்ட் பாக்கெட்டிலிருந்து எடுத்துத் தந்தார்.

''ஒரு கம்ப்ளேண்ட் எழுதிக் கொடுத்துட்டுப் போங்க.''

எழுதிக் கொடுத்தார்.

''வரேங்க.''

''கொஞ்சம் கவனமா இருங்க.''

## 5

'**ஒரி**ர்ர்ர்ரிங்ங்ங்ங்...'

தியேட்டரில் நைட்ஷோவுக்கான டிக்கெட் கொடுப்பதற்கு மணி ஒலித்தது.

தரை டிக்கட் கவுண்டரில்...

ரெண்டு ரூபாய் நோட்டு ஒன்றை நீட்டி, ''ரெண்டு'' என்றது ஒரு குரல்.

சந்தேகமே இல்லே. அது கள்ள நோட்டுத்தான்.

''யாருய்யா இந்த நோட்டைக் கொடுத்தது? இப்படி இந்தப் பக்கம் வாய்யா'' என்றான் டிக்கட் கொடுப்பவன்.

அந்த இரண்டு பேரும் வந்தனர்.

ஒருவன் கைலி கட்டிக் கொண்டிருந்தான். இன்னொருவன் நாலு முழ வேட்டியை மடித்துக் கட்டியிருந்தான். கைலி கட்டியவனுக்கு முப்பது வயதிருக்கும். வேஷ்டி கட்டியிருந்தவனுக்கு முப்பத்தைந்து இருக்கலாம்.

அவர்கள் இருவரையும் மானேஜர் தம் அறைக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்துவிட்டு, ஏற்கனவே போன் மூலம் விவரத்தைச் சொல்லி, உடனே தியேட்டருக்கு வரச் சொல்லியிருந்த சப்-இன்ஸ்பெக்டர் சங்கரின் வருகைக்காகக் காத்திருந்தார்.

சற்று நேரத்தில் போலீஸ் ஜீப் விரைந்து வந்தது.

எஸ். ஐ.யைப் பார்த்ததும் அவர்கள் பயப்பட ஆரம்பித்தனர்.

''நாங்க ஒரு தப்பும் செய்யலேயே'' — பரிதாபமாகச் சொன்னான் வேஷ்டி கட்டிக் கொண்டிருந்தவன்.

''நீ ஒரு தப்பும் பண்ணலே. நான் கேக்கிற கேள்விக்கு மட்டும் பதில் சொல்லு'' என்று கூறி நாற்காலியில் அமர்ந்தார்.

''நீங்க ரெண்டு பேரும் எந்த ஊரு?''

''இதே ஊருதாங்க'' என்றான் கைலி.

''எங்கே வேலே பாக்குறீங்க?''

''நான் ஜவுளிக் கடையிலே வேலே பாக்குறேன். அவன் ஹோட்டல்லே சர்வரா இருக்கான்'' என்றான் நாலு முழ வேஷ்டி.

''இப்போ டிக்கெட் எடுக்கப் பணம் கொடுத்தீங்களே... அது யாரோடது?''

''என்னோடதுங்க'' என்றான் கைலி.

''இந்தப் பணம் உனக்கு ஏது?''

''தீபாவளிக்கு போனஸ் கொடுத்த பணத்துலே ஜவுளி எடுத்தது போக மீதியிலே உள்ள பணம்தான் இது.''

''இது உன்னோட முதலாளி கொடுத்ததா? இல்லே ஜவுளிகடையிலே வாங்கின மீதியா?''

''ஜவுளிக் கடையிலே வாங்கின மீதிச் சில்லறைப் பணத்திலேர்ந்துதான் எடுத்துக்கிட்டு வந்தேன்.''

விசாரணையைக் கேட்டுக் கொண்டு அமைதியாக நின்று கொண்டிருந்தார் மானேஜர்.

அந்த அறையில் உள்ள சுவர்க் கடிகாரத்தில் மணி பத்து இருபது.

உள்ளே நியூஸ் ரீல் ஓடிக் கொண்டிருந்தது.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு நன்றாக ஓர் இழுப்பு இழுத்துப் புகையை விட்டபடியே ''எந்த ஜவுளிக் கடை?'' என்றார்.

''தங்கம் ஜவுளி ஸ்டோருங்க.''

நாலு முழ வேஷ்டியிடம் ''நீ எங்க வேலே செய்யிறே?'' என்று கேட்டார்?

''முருகன் ஜவுளி ஸ்டோருங்க.''

கைலி கட்டியிருப்பவனைப் பார்த்து ''வீட்டிலே ஏதுவும் பணம் வெச்சிருக்கியா?'' என்றார்.

''எழுவத்தைஞ்சு ரூவா இருக்கும்.''



''சரி வாங்க. ரெண்டு பேரும் ஜீப்லே ஏறுங்க. மானேஜர்! தொடர்ந்து கவனமாவே இருங்க. ஏதும் தகவல்னா போன் பண்ணுங்க.''

ஜீப் சைகியின் வீட்டின் முன் வந்து நின்றது.

அருகிலிருந்த அரிக்கேன் விளக்கொளியில் இன்ஸ்பெக்டர் சைகி கொடுத்த பணத்தை ஆராய்ந்தார்.

அதில் இன்னுமொரு 'அந்த' இரண்டு ரூபாய் இருந்தது.

அதை எடுத்துக் கொண்டார் சங்கர்.

''நீ ஸ்டேஷனுக்கு வந்து ஒரு ஸ்டேட்மெண்ட்ல கையெழுத்துப் போட்டுட்டு வந்துடு. அப்புறம் நாங்க கூப்பிடும்போது ஸ்டேஷனுக்கு வரணும். ஜீப்லே ஏறு.''

''ஐயா... ஐயா... அவரை ஜெயில்லே போட்டுடாதீங்க ஐயா!''

கதறி அழுதாள் மனைவி.

''பயப்படாதேம்மா. இப்போ உடனே திரும்பி வந்திடுவாரு.''

## 4

மறுநாள்.

மதியம் மூன்று மணி.

எஸ். ஐ.யின் உதையை வாங்கிய பைக் உறுமியது.

கியர் நியூட்ரலுக்கு வரும்போது பைக், தங்கம் ஜவுளி ஸ்டோரை நெருங்கியது.

''வாங்க... வாங்க.

''ஜவுளி எடுக்க வந்தீங்களா?''

''இல்லேல்லே. நான் அதுக்காக வரலே. நூறு ரூபாய்க்கு சேஞ்ச் வேணும். ஓணா இருந்தா தேவலாம்.''

டார்வினின் பரிணமக் கொள்கை முதன் முதலில் பாடமாக மாணவர்களுக்குப் போதிக்கப்பட்ட பொழுது அமெரிக்காவில் ஒரு விநோத சர்ச்சை கிளம்பியது. ஒரு தந்தை, அக்கொள்கை கடவுள் ஏழு நாட்களில் உலகைப் படைத்தார் என்னும் பழைய ஏற்பாட்டுக் கொள்கைக்கு விரோதமாக இருப்பதால் தம் மகனுக்கு மத நம்பிக்கை குறைகிறது என்று அதைப் போதிக்கும் ஆசிரியர் மீது வழக்குத் தொடர, அவ்வாசிரியருக்கு அபராதமும் விதிக்கப்பட்டது! —நிரஞ்சனா



''அதுக்கென்ன தர்றேங்க. தீபாவளி நேரமா இருக்கிறதுனாலே பேங்கிலேருந்து சில்லறையாகவே வாங்கி வச்சக்கிறது'' என்றபடியே 'கல்லா'விலிருந்து ஏற்கனவே பிரிக்கப்பட்ட இரண்டு ரூபாய்க் கட்டிலிருந்து ஐம்பது தாளை எண்ணி எடுத்து சங்கரிடம் கொடுத்தார்.

சங்கர் கொடுத்த நூறு ரூபாயைக் 'கல்லா'வில் போட்டுவிட்டு, ''எண்ணிப் பார்த்துடுங்க'' என்றார்.

எண்ணினார். 'அந்த' நோட்டில் இரண்டு இருந்தது.

அதைக் கவனிக்காதது போலவே எண்ணி முடித்துவிட்டு, ''சரியா இருக்கு. நீங்க எப்பவும் கையிலே கேஷ் வச்சக்கிறது இல்லையா?'' என்றார்.

''இல்லே. அப்பப்ப பேங்கல ட்ராப் பண்ணுவோம்.''

''ஆமாம்... நம்ம ஊர்லே ஷூட்டிங் எடுத்தாங்களே... அவுங்க இங்கே வந்து ஏதாவது பர்சேஸ் பண்ணுனாங்களா?''

''இல்லீங்க. ஒரு நாள் அந்தப் படத்தை எடுக்கிற பாகஸ்தர்லே ஒருத்தர்னு அவரும் டைரக்டரும் வந்தாங்க. வந்து, 'உங்க ஜவுளிக் கடையிலே ஹீரோயினும் ஹீரோவும் ஜாலியா பர்ச்சேஸ் பண்ற மாதிரி ஒரு ஷாட் எடுக்கிறோம். அதுக்கு ரெண்டாயிரம் ரூவா தாங்க' அப்படின்னாங்க. அதெல்லாம் வேண்டாம்னு சொல்லி அனுப்பிட்டேன்.''

''ஏன் அப்படிச் சொன்னீங்க? நல்ல பப்ளிசிட்டிதானே அது?''

''ரெண்டாயிரம் ரூபாய் சம்பாதிக்கிறதுக்கு எவ்வளவு கஷ்டப்படணும்னு எனக்குத்தான் தெரியும். அப்படிக் கொடுத்தாக் கூட படம் வெளியிலே வருமோ வராதோ. நான் சொல்றது சரிதானே?''

''ரொம்ப சரி. இப்போ உங்ககிட்டே வேறே ரெண்டு ரூபா கட்டு இருக்கா?''

''ஓ! இருக்கே.''

ஒவ்வொரு கட்டிலும் 'அந்த'நோட்டுகளில் சில கலந்திருந்தன.

''மிஸ்டர் பெருமாள்! நீங்க என்னோட ஸ்டேஷனுக்கு வந்து ஒரு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கையெழுத்துப் போட்டுட்டு வந்துடுங்க.''

''ஏன்?'' பதற்றத்துடன் கேட்டார்.

''இதுலே கள்ள நோட்டு இருக்கு. இதை உங்ககிட்டே இருந்துதான் கைப்பற்றினோம்கிறதுக்குத்தான் ஸ்டேட்மெண்ட். அப்புறம் இன்வெஸ்டிகேஷனுக்குத் தேவைப்படும்போது உங்களைக் கூப்பிடுவோம்.''

## 5

சனிக் கிழமை மதியம்.

கான்ஸ்டபிள், பாங்க் காஷியர் முருகேஷின் வீட்டிற்கு வந்து 'காலிங் பெல்லை' அழுத்தினார்.

போலீஸைக் கண்டதும் சற்று அதிர்ந்து, ''என்ன? யாரு வேணும்?'' என்றார் காஷியர்.

''உங்களை சப்-இன்ஸ்பெக்டர் ஐயா கையோட அழைச்சிக்கிட்டு வரச் சொன்னாங்க.''



அப்பா (ஏர்போர்ட்டில்): தனியா நீ அமெரிக்காபோறியே கவலையா இருக்கு?
மகள்: கவலைப்படாதீங்கப்பா. அமெரிக்கா போனதும் முதல் வேலையாத் துணை தேடிக்கிறேன்!

—உ. ராஜாஜி

## 6

மழை தூறிக் கொண்டிருந்தது.

வேஷ்டியை மடித்துக் கட்டி, குடையை மடித்துக் கட்டிக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைந்தான் முருகேஷ்.

''நீங்க மீனு பாங்க்லேதானே வேலை பாக்கிறீங்க?''

''ஆமாம்.''

''இங்கே எவ்வளவு வருஷமா வேலை பாக்குறீங்க?''

''நாலு வருஷமா.''

''உங்க பேங்க்லே டிராப் பண்ண பணத்திலே... ரெண்டு ரூவா கட்டுலே கள்ள நோட்டு நிறைய இருக்கே...?''

''நான் கவனிக்கலே. எனக்குத் தெரியாது.''

''நீங்களா ஒத்துக்கிட்டா நல்லது. இல்லே நாங்களா கண்டு பிடிச்சா தண்டனை அதிகமாக இருக்கும்.''

சற்று நேரம் மௌனமாக இருந்தான் முருகேஷ்.

அந்த மௌனத்தைப் பயன் படுத்திக் கொண்டு மேலும், ''உங்களை அரெஸ்ட் பண்ணி ஒரு நாள் லாக்கப்லே வெச்சாப் போதும். உங்களை வேலையிலேருந்து டெர்மினேட் பண்ணிடுவாங்க தெரியுமில்லே?'' என்றார். இன்ஸ்பெக்டர்.

''ஸார்! நடந்த உண்மையைச் சொல்லிடறேன். இந்த வேலை போயிட்டா என் குடும்பம் ரொம்பக் கஷ்டப்படும்.''

''சொல்லுங்க. ரைட்டர்! இவரு சொல்றதை அப்படியே எழுதிக் கையெழுத்து வாங்கிக்கங்க. ம்... நீங்க சொல்லுங்க.''

## 7

ஞாயிற்றுக் கிழமை.

பதினொரு மணி.

பேங்கிலே உள்ள போன் கிணுகிணுத்தது.

பாங்க் மாடியில் தங்கியிருக்கும் மானேஜர் செல்வம் இறங்கி வந்து போனை எடுத்தார். வயது முப்பத்தைந்து. கவர்ச்சியான உடல்.

''எஸ்... செல்வம் ஸ்பீக்கிங்.''

''.......''

''முருகேஷா? என்?''

''.......''

''அந்த வேலையை மத்தியானமா வெச்சுக்குங்க. இப்போ நம்ம வேலையைக் கொஞ்சம் முடிச்சுடலாம். இந்த ஸண்டேயை விட்டுட்டா இனிமே அடுத்த ஸண்டேதான் செய்ய முடியும். எவ்வளவு நாளைக்குத்தான் அதை நம்ம கேஷ் ரூம்லேயே வெச்சுக்கிறது? இன்ஸ்பெக்ஷன் ஏதாவது வந்துடுச்சினு? ரொம்ப ஆபத்தா ஆயிடும்.''

லேசாகத் திறந்திருந்த கதவைத் திறந்து கொண்டு சப்-இன்ஸ்பெக்டர் உள்ளே நுழைந்தார். ''மிஸ்டர் செல்வம் உங்களை அரெஸ்ட் பண்றேன்.''

''நீங்க பேங்க் பணத்திலேருந்து ஐம்பதாயிரம் ரூபாயை எடுத்துட்டு அதுக்குப் பதிலா கள்ள நோட்டைக் கலந்து புழக்கத்திலே விட்டிருக்கீங்க. உங்க கேஷியர் முருகேஷ் அப்ரூவரா மாறி எல்லா விவரத்தையும் சொல்லிட்டார். இப்போ... நீங்க போன்லே பேசினதெல்லாம் 'டேப்'லே ரிக்கார்டாயிருக்கு.''

ரிஸீவரை வைத்துவிட்டு, செல்வம் பிரமை பிடித்தது போல நின்றார்.

''மிஸ்டர் செல்வம்! நீங்க வெச்சிருக்கிற கள்ள நோட்டை யெல்லாம் ஹாண்ட் ஓவர் பண்ணுங்க. இந்தப் பணத்தை உங்ககிட்டே கொடுத்தவங்க விவரங்களைச் சொல்லுங்க.''

''சொல்றேன்.''

## 8

கேஷியர் முருகேஷின் வாக்குமூலத்தில்...

''இதுக்கு முக்கிய காரணம் எங்க மானேஜர்தான். அவருகிட்டே, இங்கே ஷூட்டிங் எடுக்க வந்திருந்த புரொட்யூஸர் பார்ட்னர், 'நீங்க இருபத்தையாயிரம் கொடுத்தீங்கன்னு அதுக்குப் பதிலா நாங்க ஐம்பதாயிரத்துக்கு ரெண்டு ரூவா கள்ளநோட்டு தர்றோம். நீங்க அதை பேங்க் பணத்திலே கலந்து விட்டுடுங்க' அப்படீன்னு சொன்னாரு. இந்தக் காரியத்துக்கு அவரு ஒத்துக்கிட்டதுக்கு முக்கிய காரணம் அவருக்கு சினிமாவிலே நடிக்கணுங்கிற ஆசைதான். இந்தப் படத்தை எடுக்க இந்த வழியிலே உதவி செஞ்சா அடுத்த படத்திலே ஹீரோவாப் போடறோம்னு சொல்லியிருக்காங்க. படத்திலே நடிக்க சான்ஸும் கிடைக்குது. அதே நேரத்திலே நோட்டு மாத்தறதிலே இருபத்தஞ்சாயிரம் ரூபாயும் கிடைக்குது. இந்த ஆசையினாலேதான் ஒத்துக்கிட்டாரு. இதுக்கு என்னோட ஒத்துழைப்பும் தேவைப்பட்டதனாலே எனக்குப் பத்தாயிரம் ரூவா தர்றேன்னாரு. மேலும் அவரு படத்திலே நடிக்க சான்ஸ் கிடைச்சதும் ஆயிரம் ஆயிரமா தர்றேன்னு சொன்னாரு. அதனாலேதான் நானும் இந்த மோசடிக்கு ஒத்துக்கிட்டேன்.''

சென்னைக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டு கிரியேட்டிங் புரொடக்ஷன்ஸின் பார்ட்னர்கள் கைது செய்யப்பட்டனர்!

1



2



# பூர்ணிமா போடும் புதிர்



3

சென்ற ஆண்டு வெளிவந்த சில படங்களின் தலைப்புகளை இங்கே பூர்ணிமா ஜெயராம் நடித்துக் காட்டியுள்ளார். எந்தெந்தப் படங்களை அவர் நினைவுபடுத்துகிறார்? படங்களைப்பார்த்துச் சொல்லுங்கள் பார்க்கலாம்.

தொகுப்பு: ஜெயம்
படங்கள்: ச. வெ. ரா. மோகன்

(விடைகள் 44ம் பக்கம்)

4



# நாற்றங்களும் மணங்களும்

போட்டிக்கதை 18

கல்கி தாசன்

திருச்சியிலிருந்து முசிறி செல்லும் தார் ரோட்டில் சொகுசாக ஓடிக் கொண்டிருந்தது அந்தக் கார். போர்டு அடையாளம் காட்டிய கப்பிச் சாலையில் திரும்பியவுடனேயே, பரட்டைத் தலையும் ஒழுகிய மூக்குமாகச் சிறுவர்கள் துரத்தத் தொடங்கி விட்டார்கள். ஆரவாரக் கூச்சலுடன். போதாக் குறைக்கு நாய்களும் 'விட்டேனா பார் உன்னை!' என்று குரைத்துக் கொண்டு கூடவே ஓடிவந்தன.

ஊரின் மத்தியில் பிள்ளையார் கோவில் மண்டபத்தில் சட்டை போடாத ஆண்கள் சிலர் கூட்டமாய் உட்கார்ந்திருந்தார்கள். காரை நிறுத்தச் சொன்னார் விநாயகம் அங்கே.

மில்லியனேர் சென்ட் மணக்க, ஸபாரி சூட்டும் கோட்டும்கண்களில் கோகோவுமாக அவர் காரை விட்டிறங்கி வருவதற்குள் மண்டபத்தில் இருந்த கூட்டம், ''வணக்கமுங்க'' என்று கும்பிட்டவாறு இவரை நோக்கி ஓடி வந்தது.

புன்னகைத்த விநாயகம், ''நான் மெட்ராஸில் வக்கீலா இருக்கேன். இந்தக் கிராமத்திலிருந்து பட்டணத்துக்குப் பிழைக்க வந்தாருல்லே பரமசிவம்? அவரோட வாரிசுகளைப் பார்க்கிறதுக்காக வந்திருக்கேன்!'' என்று கம்பீரமாகச் சொன்னார்.

கூட்டத்தில் ஒரே ஒருத்தராகப் பனியன் போட்டிருந்த நபர் கொஞ்சம் முன்னால் வந்து ''நானு இந்த ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவரா இருந்தேனுங்க முந்தி. எதுக்காக பரமசிவன் வாரிசுகளை நீங்க பார்க்கோணும்னு தெரிஞ்சுக்கலாமுங்களா?'' என்று பவ்யமாக விசாரித்தார்.

''அவங்களிடம் நானே சொல்றேன் உங்க முன்னாலேயே!'' என்று விநாயகம் மறுபடியும் புன்னகைக்கவும்—

''சந்தோஷமுங்க. அத்தினி பேரையும் இப்பவே வரச் சொல்றேன்!'' என்ற மாஜித் தலைவர், ''எலே முனியாண்டி! ஓடிப்போய் எசமான் குந்தக் கட்டில் கொண்டு வாலே!'' என்றார்.

''எலே! கருப்பா! காரைத் தொட்டுப் பசங்க வெள்ளாடறதைப் பார்த்துக்கிட்டு மரமாட்டம் நிக்காம விரட்டுலே! — எலே மூக்கா! ஓடிப்போய் நம்ம மரத்துலே ஐயா சாப்பிடறதுக்கு நல்ல எளனியா பறிச்சுக் கிட்டு வாலே!'' என உத்தரவுகளை அள்ளிவீசினார்.

நொடியில் வந்தது கட்டில். பின்னாலேயே இளநீர். விநாயகம் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே பத்துப் பன்னிரண்டு ஆண்கள் சட்டை இல்லாத உடம்பில் கந்தல் துண்டுகளைப் போர்த்திக் கொண்டு கூட்டத்திலிருந்து தனியே பிரிந்து அவர் எதிரே நின்று ''கும்பிடறோமுங்க'' என்று கோரஸ் இசைத்தார்கள்.

''பரமசிவத்தின் வாரிசு இம்புட்டுப்பேர் தானுங்க!'' மாஜித் தலைவர் ஒவ்வொருவராய் அறிமுகப்படுத்தி வைத்தார்.

''நான்கூட ஒருத்தர் ரெண்டு பேர்தான் இருப்பாங்கன்னு நினைச்சேன். பரவாயில்லையே!'' ஆச்சரியப்பட்டார் விநாயகம்.

''சமமாப் பிரிச்சாலும் தலைக்குப் பத்தாயிரத்துக்குள்ளேயே பரமசிவம் பட்ட ஒரு லட்ச ரூபா கடனை சுலபமா இவங்க அடைச்சுடலாமே!''

''கடனா?'' வாரிசுகள் வெலவெலத்துப் போனார்கள்.

''ஆமா. பரமசிவம் இங்கே இருந்த நிலபுலன்களையெல்லாம் வித்துட்டு மெட்ராசுக்கு வந்து சொந்தமா பிஸினஸ் பண்ணி ஓஹோன்னு கொஞ்ச காலம் வாழ்ந்துகிட்டிருந்தது நிஜம். அப்புறம் பிஸினஸ் நொடிச்சுப்போய் ஏகப்பட்ட கடன் பட்டு அதிலேயே மனசொடிஞ்சு செத்துப் போயிட்டார். அவர் பட்ட கடனை அவருக்கு வாரிசு



இருந்தா அவங்களிடம் வசூல் பண்ணிக்கலாம்னு கோர்ட்லே தீர்ப்பு ஆகியிருக்கு. அதுக்காகத்தான் வந்தேன்!'' என்று விநாயகம் வந்த காரணத்தை விளக்கினரோ இல்லையோ—

''ஐய்யய்யோ'' என்று கூப்பாடு போட்ட வாரிசுதாரர்கள் ஒருவருக்குள் ஒருவராகக் கிகிசுத்துப் பின்னடைந்தார்கள். ''நாங்க பரமசிவத்துக்கு நேரடி வாரிசு இல்லீங்க!'' என்றவாறு.

''ஆமாமுங்க'' முன்னுக்கு வந்தான் ஒரு ஆள். ''பரமசிவன் இவங்களுக்கு ஒன்னு விட்ட பெரியப்பன், சித்தப்பன் மொறைங்க. அதனுலே இவங்களுக்கும் அவரு பட்ட கடனுக்கும் கிஞ்சித்தும் சம்பந்தம் இல்லீங்க!''

''நீ யாருய்யா?'' ஆயாசத்துடன் கேட்டார் விநாயகம்.

''என் பேரு ராமுப்பிள்ளை. செத்துப்போன பரமசிவம் என்னேட நேரடிப் பெரியப்பன். அதாவது என் அப்பனேட கூடப் பொறந்த பொறப்புங்க. அதனுலே நானு தான் அவரோட ஒரே வாரிசு!''

மாஜித் தலைவரும் ஆமோதித்தார். ''இவன் சொல்றது நிஜமுங்க.''

''அப்படீன்னு அவர் பட்ட கடனை நீ தர்றதுக்குச் சம்மதிக்கிறியா?'' விநாயகம் அவனை நேருக்கு நேராகப் பார்த்துக் கேட்டார்.

''கோர்ட்டு அப்படி உத்தரவு போட்டிருந்துச்சுன்னு நானு தந்துதானுங்களே ஆகோணும்?'' வருத்தத்துடன் சொன்னுன் அவன்.

இப்போதுதான் அவனை நன்ருகப் பார்த்தார் விநாயகம். கூடினல் முப்பத்தைந்து இருக்கலாம். எண்ணெய் பார்க்காத தலை. கத்தியை வாரக் கணக்கில் சந்திக்காத முகம். குழி விழுந்த கண்கள். வத்ர தேகம். வாழைக் கறைபடர்ந்த அழுக்கு வேட்டி.

''உன் கிட்டப் பணம் இருக்கா, ஒரு லட்சம், இப்பவே தர்றதுக்கு?'' ஆச்சரியத்துடன் வினவினர் விநாயகம்.

''ஏதுங்க இம்புட்டுப் பணம் என்கிட்டே இப்போ?'' தலையைச் சொறிந்து கொண்டு சொன்னுன் அவன். ''சம்பாரிக்கக் கொஞ்சம் கொஞ்சமாத் தர்றேனுங்க. எசமான் பெரிய மனசு பண்ணிக் கடன்குடுத்தவங்ககிட்டே சொல்லிச் சிறுகச் சிறுக வாங்கிக்கிறதுக்கு அவங்களைச் சம்மதிக்க வைக்கோணும்!''

இந்தக் காலத்தில் இப்படியும் ஒரு மனிதனு? ''என்கூட வர்ரியா?'' கேட்டார்.

''வர்றேனுங்க'' — ஒப்புக்கொண்டான் அவன். ''சித்தே இங்கினியே குந்திக்கினு இருந்தீங்கன்னு நானு வீடு வரைக்கும் போய் என் பொண்டாட்டிக்கிட்டப் பயணம் சொல்லிப்புட்டுச் சட்டை போட்டுக்கிட்டு வந்துடறேனுங்க!''

விநாயகம் புன்னகைத்தார். ''ஏன்யா? நான் உன்னேட வந்து உன் வீட்டை, உன் சம்சாரத்தைப் பார்க்கக் கூடாதா?'' என்றவாறு.

''அதில்லீங்க'' தலையை மறுபடியும் சொறிந்தான் அவன். ''தெருவுக்குக் கார் வராது. நடந்துதான் போவனும். அத்தோட என் வீடும் ரொம்பச் சின்னது. நீங்க அங்கல்லாம்வர்றதுநல்லாஇருக்காதுங்களே''

''பரவால்லே வர்ரேன்!''

அவன் மரியாதையோடு அவரை விட்டு ஒதுங்கியே நடந்து வந்தான்.

''அது என்யா பேரை ராமுப் பிள்ளைன்னு சொல்றே? சாதி எல்லாம் கூடாதுன்னு சர்க்கார் சொல்றது உனக்குத் தெரியாதா?'' என்று பரிகாசம் செய்தார்.

''வக்கீல் எசமானுக்கு குழந்தைங்க கிடையாது போலிருக்கு.'' காவிப் பற்கள் தெரியச் சிரித்தான் அவன்.

''என்யா? சாதிக்கும் குழந்தைக்கும் என்ன சம்பந்தம்?''

''புள்ளை பொறந்த அன்னிக்கேதான் சாதி வந்துடுத்துங்களே எஜமான்! ஆசுபத்திரியில் அப்பன் பேரையும் ஆயி பேரையும் பதிஞ்சகையோட என்ன சாதின்னு தானே கேக்கறுங்க. அப்புறம் வளர்ந்து ஸ்கூலுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும்போதும், 'என்னலே உன்சாதி?' என்று கேட்டு எழுதி ரேகையும்வாங்கிக் கிடறுங்களே! .என் சாதியை நான் வெளியே சொல்லிக்கிறதுலே என்ன தப்புங்க எசமான்? நான் வீரக்குடி வெள்ளாளன்''

''அப்படிப் போடு. அப்ப நீ பிற்பட்ட வகுப்பு. சர்க்கார் சகாயம் ரொம்பக் கிடைக்கும்னு சொல்லு.''

''ஏதுங்க?'' அலுத்துக் கொண்டான் அவன். ''கிளின்யூ இன்ஸ்பெக்டர் கையெழுத்துப் போட்டுக் குடுத்தாத்தான் அந்தச் சலுகை கிடைக்குமுங்க!''

''ஏன் ட ட்டேங்கிறர்? காத கே கேட்கிறாரா?''



''இல்லீங்களே. அப்படியே கேட்டாலும் தான் குடுத்துப்புடலாமே. இந்த வீரக்குடி சாதி தஞ்சாவூர் ஜில்லாவிலே மட்டும்தான் இருக்காம். அதனாலே இங்கே வரக்கூடாதுன்னு உத்தரவு இருக்குன்னு சொல்றாருங்க!''

இதற்குள் வீடு வரவே. ''இதுதானுங்க என்னோட வீடு!'' என்று காட்டினான்.

ரொம்பப் பாமரத்தனமான குடிசை. மண் தரைக்குச் சாணி மெழுகி யிருந்தது. ''எலே கந்தா! பாயை எடுத்தாந்து திண்ணையிலே போடுலே! எசமான் குந்தட்டும்!'' என்று கூப்பாடு போட்டான் அவன்.

எலும்பும் தோலுமாய் ஒரு பெண் எட்டிப் பார்த்து இவரைக் கண்டதும் தலையை விருட்டென்று உள்ளே இழுத்துக் கொண்டது.

அவர் உட்காரவும் ராமு உள்ளே ஓடி மனைவியுடன் திரும்பி வந்து. 'இவதான் என் சம்சாரமுங்க!... கும்பிடு புள்ளே!'' என்றான்.

பதிலுக்குக் கும்பிட்ட விநாயகம் நிமிர்ந்து பார்த்தார். 'பொன்னுக்கு வீங்கி' வந்தால் கூட குன்றிமணித் தங்கம் இல்லே அவளது உடம்பில். இவனா லட்ச ரூபாய் கடனைக் கட்டப் போகிறான்!

''ஏன்யா உனக்குநிலம்ஏதாவதுஇருக்கா?''

''உங்க புண்ணியத்தில் மூணு காணி நஞ்சை இருக்குதுங்க!''

''நெல்தானே சாகுபடி? அறுத்தாச்சா? கண்டு முதல் எல்லாம் எப்படி?''

''ஆச்சுங்க. ஏக்கருக்கு இருபத்தஞ்சு மேனி எழுபத்தஞ்சு வந்துருக்குங்க. ஆனா வந்தது அம்பத்தஞ்சுதானுங்க!''

''ஏன்யா? திருடு போயிடுச்சா? வழியில்?''

''இல்லீங்க. எருது அறுப்புக்கு ஒன்பது. கோயிலுக்குக் கால், வாய்க்கால் வெட்டுக்குக் கால் வண்ணானுக்குக் கால், பரியாரிக்குக் கொண்டியோட்டி, நீரா மூக்கன் – கொப்புக் கயிறு எடுத்து வுடறவன் – லஸ்கரு இவனுங்களுக்கு ஒண்ணு. தண்ணி கட்டிக்கு மூணு.

---

## இடியட்

முன் காலத்தில் எவ்விதப் பதவியும் வகிக்காத ஒரு சாதாரணப் பிரஜையை 'இடியட்' என்று அழைப்பார்கள். அதுவே பிற்காலத்தில் ஒரு வசைச் சொல்லாக மாறிவிட்டது.

– எஸ். முகம்மது யூசுப்



தாம்பு அடிக்கிறவனுக்கு அஞ்சு. வண்டி வாடகை ஒண்ணு. ஆக இருபது மூட்டை களத்திலேயே செலவானது போக மிச்சம் அவ்வளவுதானுங்க!''

விநாயகத்துக்கு ஆயாசமாக இருந்தது.

நெல் விற்கப்பட்ட சோகத்தையும் இரண்டாயிரம் ரூபாய் கிடைத்த விபரத்தையும் சொல்கிறான் ராமு.

விநாயகத்தின் வக்கீல் மனம் கணக்குப் போட்டுப் பார்த்ததில், வருடத்துக்கு நாலு வட்டி கூடத் தேறாதது புரிந்துபோய்ப் பரிதாபப்பட்டு. ''இந்த நிலத்தை மொத்தம் வித்துப் பணத்தைப் பாங்கிலே பிக்ஸட் டெபாசிட்டில் போட்டாக்கூட இதைவிட மூணு மடங்கு வருமானம் வருமே! அப்படி உட்கார்ந்து சுகமாத் தின்கிறதை விட்டுட்டு ஏன் இப்படி வேகாத வெய்யிலிலும் கொட்டுகிற மழையிலும் சகதியிலும் கிடந்து லோல் படணும்?'' என்று நிஜமாகவே கேட்டார்.

பகபகவென்று சிரித்தான் அவன். ''உழுதவன் கணக்குப் பார்த்தா உழக்கு கூட மிஞ்சாது எசமான்! நீங்க சொல்ற மாதிரி நாங்க எல்லாரும் பாங்குலே பணத்தைப் போட்டுட்டுக் குந்தித் தின்க வந்துட்டா சாப்பிடறதுக்கு அரிசி எங்கேயிருந்து உற்பத்தியாகும்?''

''அந்த ரெண்டாயிரமாவது பையில் இருக்கா?, இல்லே அதுவும் போயிடுச்சா?'' என்று விசாரித்தார்.

''போயிடுச்சுங்க எசமான்? கூட்டுறவு சங்கத்தில் உரக்கடன் வாங்கியிருந்தேன். ரெண்டாயிரத்துக்கு. அதைக் கட்டிட்டேன் திருப்பி!''

''ஐய்யயோ!'' பதறினார் விநாயகம். ''சிறு விவசாயிங்க கூட்டுறவு சங்கத்தில் வாங்கிய கடனைத்தான் சர்க்கார் தள்ளுபடி பண்ணியாச்சே! உனக்குத் தெரியாதா?''

''நான் பணம் கட்டின ரெண்டாவது நாளிலேதான் அந்த உத்தரவு வந்துச்சுங்க எசமான்!''

''கட்டின பணத்தைத் திருப்பி வாங்கிறதுதானே?''

''நான் ஒரு சின்னத் தப்புப் பண்ணிட்டேன் எசமான்!'' தலையைச் சொறிந்தான் அவன். ''சங்கத்துக்குப் பல தடவை அலைஞ்சு கேட்டுப்பார்த்தும் பணத்தைத் திருப்பித் தரமாட்டேங்கறாங்களேன்னு வருத்தப்பட்டு உங்களை மாதிரி வக்கீல் ஒருத்தர் கிட்டே யோசனை கேட்டேன். நீங்க வாயாலே கேட்கிறதை விட ரிக்கார்டு மூலமா கேட்கணுமய்யான்னு சொல்லி, கலெக்டருகிட்டக் கொடுக்கிறதுக்கு ஒரு மனு எழுதித் தந்தாரு. திங்களன்னைக்கு முறையீட்டு நாளு நடக்குதில்லே, அதிலே கொண்டு போய் அந்த மனுவை கலெக்டரு அம்மாகிட்டக் கொடுத்தேன். அந்தப் பொம்பிளை கலெக்டரு அம்மா ரொம்ப நல்ல மாதிரி. பொறுமையா என்கிட்டே விசாரிச்சுப்புட்டு உடனே அந்த மனுவை இந்தச் சங்கத்துக்கு ரிப்போர்ட் கேட்டு அனுப்பிச்சுட்டாங்க...''

''இதில் என்னய்யா தப்பு?''

''தப்புங்களா் சக தலைவர். எங்களை யெல்லாம் மதிக்காம கலெக்டருகிட்டே புகார் மனுக்கொடுத்தேல்ல? அவங்க கிட்டயே போய் லோனை வாங்கிக்கனு சொல்லி நான் புது லோனு கேட்டுப் போனப்போ விரட்டினாரு!''

விநாயகத்துக்கு அழவேண்டும் போலத் தோன்றியது. பிரயாசைப்பட்டு அடக்கிக் கொண்டு. ''திருப்பிக் கலெக்டர் கிட்டயே போய்ச் சொல்ல வேண்டியதுதானே?'' என்று தழுதழுத்தார்.

''சொன்னா மேலே சங்கத் தலைவருக்கு என்னிடம் உள்ள கோபத்தை வளர்க்கிற மாதிரி ஆயிடாதுங்களா எசமான்? தலைவருக்குப் பொண்ணு கொடுத்த மாமனாரு நாலாவது கல்லில் இருக்கிறார். அவரைக் கூப்பிட்டுக்



அவன்: பாங்க் மேனேஜர் மகளைக் கல்யாணம் செஞ்சிண்டது தப்பாப் போச்சு.

இவன்: ஏன்?

அவன்: வரதட்சிணை பத்தாயிரத்துக்கு மூணாயிரத்து, எழுநூற்றி ஐம்பதுக்கு காஷ் சர்ட்டிபிகேட் தந்துட்டார். பத்து வருஷம் கழிச்சுப் பத்தாயிரம் வாங் கிக்கச் சொல்லிட்டார்.

—லலிதா செல்லப்பா

கிட்டுப்போயித்தான் சரிபண்ணனும்இவரை. அதுக்காகத்தான் அந்த மாமனார் வீட்டுக்குப் போய் கட்ட உடைச்சுக் குடுத்துட்டு வர்றேன் ஒரு வாரமா!''

'இப்படியும் ஒருத்தனா இந்தக் காலத்தில்?' என்று வியந்தார் விநாயகம்.

''சீக்கிரம் சென்னைக்குக் கிளம்புகிற வழியைப் பாரு!''

''இதோ ஒரு நொடியில் சாப்பிட்டுவிட்டுக் கிளம்பறேனுங்க!'' என்று உள்ளே ஓடினான் அவன்.

சிறிது நேரம் தந்து, சொல்லாமல் கொள்ளாமல், 'திடும்' என்று உள்ளே பிரவேசித்த விநாயகத்துக்குக் காத்திருந்தது அதிர்ச்சி.

துவையலைத் தொட்டுக் கொண்டு மனைவி அகப்பையில் மோந்து ஊற்ற இவன் மண்கலயத்தில் குடித்துக் கொண்டிருந்தான் கூழை! கண்களில் நீர் பனிக்க, ''என்னய்யா இது அநியாயம்? ஊருக்கு எல்லாம் சோறு தின்க நெல் விளைச்சுக் கொடுக்கிற நீ கேப்பைக் கூழ் குடிக்கிறே?'' என்று தழுதழுத்தார்.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தவன் சமாளித்துக் கொண்டு சிரித்தான். ''எல்லாக் கணக்கையும் கேட்ட நீங்க விவசாயச் செலவுக்கும் சங்கக் கடனுக்குமே வந்த வருமானம் போன பின்னாடி எப்படிய்யா சாப்பிடறேன்னு கேட்கலியே? அப்படிக் கேட்டிருந்தா இ ப் ப டி த் தா னு ங் கன்னு சொல்லியிருப்பேன்!'' என்று கூழ் கலயத்தைத் தூக்கிக் காண்பித்தான். இப்போது தான், இந்த நிமிடத்தில்தான், அவனது கண்கள் பனித்திருந்தன.

''இந்த நிலைமையிலேநீ எப்படிய்யா மெட்ராஸ்லே உன் பெரியப்பன் பரமசிவம் வாங்கியிருக்கிற ஒரு லட்ச ரூபா கடனை அடைப்பே?'' என்று கேட்டுப் பார்த்தார்.

''அப்படிச் சொல்லாதீங்க. நிச்சயம் அடைப்பேனுங்க. இந்தக் கூழும் இல்லாம பச்சைத் தண்ணியைக் குடிச்சுக் கிட்டாவது சிறுகச் சிறுக என் பெரியப்பன் பட்ட கடனைக் கண்டிப்பா அடைச்சிடுவேனுங்க!''

கண்ணீரைவழித்தெறிந்தவிநாயகம், ''இப்பத்தான்என்வாழ்க்கையிலேயே முதன் முறையாக ஒரு மனுஷனை என் கண்ணாலே பார்க்கிறேன். உன் பெரியப்பா மெட்ராஸிலே ஒட்டாண்டியா சாகலே. அஞ்சு லட்ச ரூபாயைப் பாங்கிலே வச்சுட்டு, முப்பது லட்சத்துக்குத் தொழிற்சாலையும் பத்து லட்சத்துக்கு ஆஸ்தியையும் அனுபவிக்கப் பெண்டாட்டியோ பிள்ளையோ இல்லாமச் செத்திருக்கார். அவரோட வாரிசை இந்த ஊரில் கண்டுபிடிச்சுச் சென்னைக்கு அழைச்சுக்கிட்டுப்போய்ச்சொத்துக்களை ஒப்படைக்கத்தான் அவரோட வக்கீலான நான் வந்திருக்கேன். கிளம்பு. முதல்லே அஞ்சு லட்சத்தை ரொக்கமா உன் கையில் கொடுக்கிறேன்.'' என்று உற்சாகமாகவும் ஆனந்தமாகவும் கூறினார் விநாயகம்.

''நீங்க சொல்றது நிஜமா?'' என்று திகைத்துக் கேட்டான் ராமு.

''ஆமாய்யா! அவ்வளவும் நிஜம். இனிமே இந்தக் கூரை வீட்டை இடிச்சு மொஸைக் பங்களாவாக் கட்டு. கழுத்தை அசைக்க முடியாத அளவுக்கு உன் பெண்டாட்டிக்கு நகையைப் பண்ணிப் போடு. இந்த ஊர் நஞ்சையை எல்லாம் விலைக்கு வாங்கு. சந்தோஷம்தானே?''

''பின்னே புள்ளையார் கோவில் மண்டபத்தில் என்னோட பங்காளிங்க முன்னாடி பெரியப்பன் கடன் வச்சிட்டுச் செத்தான்னு சொன்னீங்களே! பொய்யா?''

''ஆமா. பொய் சொல்லல்லேன்னா நான் வக்கீலா இருக்க முடியுமா? ஆனா நாரதர்

கலகம் நன்மைக்கே என்கிற மாதிரி என்னோட பொய் எல்லாமும் என் கட்சிக்காரனுடைய நன்மைக்காகத்தான்! இப்போக்கூட இப்படிப் பொய் சொன்னதினால்தான் ஒண்ணுவிட்ட பெரியப்பனுக்குச் சொந்தம் கொண்டாடிக்கிட்டு வந்த உன் பங்காளிங்களெல்லாம் ஓடிப்போனாங்க. அதோட உண்மையான வாரிச நீதான்னு என்னாலே கண்டுபிடிக்க முடிஞ்சுது.'' பெருமிதத்துடன் கூறிய வினாயகம் ''சீக்கிரம் எழும்புய்யா! காத்துக்கிட்டு நிக்கிற காரே இனிமே உன்னுடையதுதான்!''என்று சிரித்தார்.

அவனது மனைவி வாயெல்லாம் பல்லாகி நெஞ்சு கொள்ளாத சந்தோஷத்தில் தத்தளிக்க, இவன் மட்டும் சோகமே உருவாகி, ''மன்னிக்கோணும் எசமான்! நான் வரலே நீங்க போங்க! எனக்கு அவரோட ஆஸ்தி வேணாம்னு சொல்றேன்!'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினான்.

திகைப்பினாலும் பிரமிப்பினாலும் திக்குமுக்காடியவர், ''ஏன் வேணாம்னுசொல்றே?'' என்றார்.

''ஆமாமுங்க.அவரைப்பத்தி உங்களுக்குத் தெரிஞ்சதைவிட எனக்கு நல்லாவே தெரியும். ஊர்ப் பணத்தை வாயிலே போட்டு அடுத்தவங்களைக் கொள்ளையடிச்சு மத்தவங்க வயித்தெரிச்சலில் சேகரிச்ச பாவமூட்டைதான் அந்தப் பணம். எனக்கு வேணாமுங்க அந்தப் பணம்!''

''வேப்பெண்ணெய் வித்த காசு கசக்குமாய்யா?''

''எனக்குக் கசக்குமுங்க.இன்னிக்கு நான் கூழைக் குடிச்சாலும் அந்தக் கூழு என் நெத்தி வேர்வை நிலத்தில் சிந்தி மானத்தோட நியாயமாச் சாம்பாரிச்ச பணமான படியால்ஆனந்தமாச் சாப்பிட்டு நிம்மதியா தூங்குறேன். அந்தப் பாவப் பணம் என் கிட்டேவந்தா இந்த ஆனந்தம் போயிடும். நிம்மதி போயிடும். வேணாங்க. என்னை இப்படியே விட்டுடுங்க!'' அவன் கையெடுத்துக் கும்பிட்டுச் சொன்னான்.

''நீயாவது உன் புருசனுக்குச் சொல்லேம்மா!'' என்று அவளை உதவிக்கு அழைத்தார் வினாயகம்.

''அவுங்க சொல்றதுதான் சரின்னு படுது எனக்கு!'' அவள் புன்னகைத்தாள்.

''பெரியப்பன் கடன் வச்சிருக்கான்னு சொன்னதும், கூட வந்து, புரோ நோட்டு எழுதித் தந்து,சிறுகச் சிறுகத்தந்துடறேன்னு சொன்னியே கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி, அது ஏன்? ஆஸ்தி வேணாம்னு சொல்ற நீ எதுக்காகக் கடனுக்கு மட்டும் வாரிசன்னு வந்தே?''

''எங்க பெரியப்பன் என்னோடதாத்தனின் மகன். என்னோட பரம்பரை. என்னோட ரத்தம். அவன் தப்பாவே நடந்து கடன் ஏற்படுத்திட்டுப் போனாலும் அவன்பட்ட கடனை அடைச்சு எங்க பரம்பரை மானத்தையும் கௌரவத்தையும் காப்பாத்தறது என்னோட கடமை. அதை நான் செய்யலேன்னா கடன் குடுத்தவங்க வவுறு எரிஞ்சு எங்க பரம்பரைக்கே சாபம் தருவானுங்க. அந்தச் சாபத்தாலே என்னோட பிதுரர்களுக்கு மோட்சம் கிடைக்காது. என்னோட சந்ததிகளும் உருப்பட மாட்டாங்க. அதனால் தந்துடறேன் கடனை என்று சொன்னேனுங்க. ஆனா இது ஆஸ்தி. இதை வேணாம்னு சொல்றதாலே யாரோட சாபமோ வவுத்தெரிச்சலோ எனக்கு கிடைக்காதுபாருங்க!''

திகைத்துப் போய் நின்ற வினாயகம் கடைசியாய், ''இந்த ஆஸ்தியை வச்சுகிட்டு நான் என்ன பண்றது? அதையாவது சொல்லு'' என்று கேட்டார்.

''ஏதாச்சும் கோயிலுக்கு, இல்லேன்னா அனாதை ஆஸ்பத்திரிக்கு எதுக்காச்சும் தருமம் பண்ணுங்க. அதைச் சம்பாரிக்கப் பெரியப்பன் பண்ணின பாபமெல்லாம் குறையட்டும்!'' என்று புன்னகையுடன் கூறிய ராமு, ''அப்போ போயிட்டு வரீங்களா எசமான்?'' என்று கையெடுத்துக் கும்பிட்டான்.

தரித்திரப் பட்டாலும் உண்மைக்குத் தலை வணங்கும், ஷேவ் பண்ணாத முகத்துடன், வேர்வையும் அழுக்கு வேட்டியுமா எதிரே நிற்கும் ராமு பாரிஜாத மலராக மணப்பது ஆதர்சன நிஜமாக நன்றாகப் புரிந்தது வினாயகத்துக்கு.

அதே சமயத்தில் தமது கட்சிக்காரரான பரமசிவம் — என் மில்லியனேர் சென்ட் உடம்பு முழுதும் ஸ்ப்ரே பண்ணிக் கொண்டு தானுமே — குடலைப் பிடுங்குகிற விதத்தில் நாறுவது அவர் மனத்துக்கு நன்றாகப் புரிந்து போனதால் வெட்கமும் வேதனையும் பட்டு அவனைக் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுக் கண்ணீர் மல்க, கூனிக் குறுகி, திரும்பி நடக்கிறார் காருக்கு. அந்தக் காரும் நாறுகிறது சகிக்க முடியாமல். ஏனெனில் அதுவும் பரமசிவம் தவறான முறையில் சம்பாதித்த பணத்தால் வாங்கிய பொருள்.



## சஅதீ கதை

பசியில் வாடிய சில இறை பக்தர்கள் பழ வியாபாரியிடம் கடனுக்கு வாங்கிச் சாப்பிட்டார்கள். கடனைத் திருப்பித் தர முடியவில்லை.

கனி வணிகன், ''கொடுக்க வக்கில்லாதவர்கள் கடன் வாங்கிச் சாப்பிட வேண்டுமா?'' என்றான்.

இறை பக்தர்களிடம் ஓர் அறிஞர் சொன்னார்: ''நாளை சாக கொடுக்கிறேன் என வணிகனிடம் சொல்லி, கனிகள் வாங்கிச் சாப்பிடுவதை விட, நாளைக்குச் சாப்பிடலாம் என இதயத்துக்குச் சொல்வது எளிது!''

—எஸ். முகம்மது யூசுப்

# யாரிடம் என்ன கற்றேன்?



டைரக்டர் ஏ. ஜெகன்னாதன் தமது அனுபவங்களைக் கூறுகிறார்:

**டி. பிரகாஷ் ராவ்**

'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' படப்பிடிப்பு நடந்தபோது நான் டைரக்டர் டி. பிரகாஷ் ராவிடம் உதவி டைரக்டராகப் பணிபுரிந்தேன். படத்தில் இரண்டு பேர் சதித் திட்டம் போடும் காட்சி. இதைப் படமாக்கும்போது முதலில் டாப் ஆங்கிளிலும் பிறகு லோ ஆங்கிளிலும் படமெடுத்தார்.

''சம்பவத்துக்கு ஏற்ப கேமிராவை வைக்க வேண்டும்'' என்றார்.

எடிட்டிங்கில் பார்த்தேன். சதித் திட்டம் பயங்கரமாகத் தெரிந்தது. சில குறிப்பிட்ட காட்சிகளை எப்படி எடுத்தால் அதிக எஃபக்ட் கிடைக்கும் என்ற கலையை அவரிடமிருந்து கற்றேன்.

**ப. நீலகண்டன்**

இவரிடமும் உதவி டைரக்டராகப் பணியாற்றினேன். 'நல்லவன் வாழ்வான்' படத்தில் ஒரு கிழவியைப்பீப்பாயில் போட்டுமூடித் தண்ணீரில் உருட்டி விடும் கட்டம். ஒரு நீர் வீழ்ச்சியிலிருந்து வெறும் பீப்பாயை உருட்டி விட்டுக் காட்சியை எடுத்தோம். டைரக்டர் ப. நீலகண்டன் ''ஒரு ஆள் பீப்பாயில் இருந்தால் இப்படி சுதந்திரமாக மிதக்காது. நீரில் அமுங்கி அமுங்கித்தான் மிதக்கும்'' என்றார்.

''நாம் வெறும் பீப்பாயை உருட்டிவிட்டால் கிராமத்து மக்கள் கூட ''நம்மைச் சினிமாக்காரங்க நல்லா ஏமாத்தறாங்க. அது வெறும் பீப்பாய்'' என்று தியேட்டரில் கூறுவார்கள்'' என்றார்.



பிறகு அவர்சொன்னபடி அசல் கிழவியைப் பீப்பாயில் ஏற்றி மிதக்க விட்டோம். ஏ ஒன் எஃபக்ட்!

**எம். ஜி. ஆர்.**

'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்பதை இவரிடம் கற்றேன்.

'இதயக்கனி' படப்பிடிப்பின் கிளைமாக்ஸ் சீன்கள் பீச்சாவரத்தில் எடுக்கப்பட்டன. (அந்தப் படத்தின் மூலமே நான் டைரக்டரானேன்) திடீரென்று திரு எம். ஜி. ஆருக்கு





சென்னையில்அரசியல்வேலைகள்வந்துவிட்டன. அதனால் இரண்டு நாள் எடுக்கத் திட்டமிட்டிருந்த காட்சிகளை முதல் நாள் காலை ஏழு மணிக்கே துவங்கி மாலை ஐந்து மணிக்குள் எடுத்துவிட்டோம். அன்று யாரும் (எம்.ஜி. ஆர் உட்பட) பகல் உணவு சாப்பிடவில்லை. பிஸ்கட், டீ சாப்பிட்டுச் சமாளித்தோம்.

**எம். என். நம்பியார்**

'ராமன் தேடிய சீதை' படப்பிடிப்பு நடந்த சமயம். அப்போது டெல்லியில் கிரிக்கெட் மாட்ச் நடந்து கொண்டிருந்தது. திடீரென்று நம்பியார் என்னிடம் வந்து. ''வேட்



டஸ்ட் ஸ்கோர் என்பது தெரியுமா?'' என்று வினவினார்.

''எனக்குத் தெரியாது சார். நான் கிரிக்கெட் பார்ப்பதில்லே.பிடிக்காது'' என்றேன்.

நம்பியார் விடவில்லை.

''இப்படி இருக்கக் கூடாது. இப்போது நீங்கள் அஸிஸ்டெண்ட் டைரக்டர். பிற்பாடு நிச்சயம் டைரக்டராகலாம். அந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு தயாரிப்பாளர் கிரிக்கெட் வீரர் பற்றிப் படமெடுக்க விரும்பி உங்களைடைரக்டராகப் போடலாம். அதனால் இந்தத் தொழிலில் இருப்பவர்களுக்குச் சமுதாயத்தில் நடக்கக் கூடிய விஷயங்கள் அத்தனையும் தெரிந்திருப்பது அவசியம்''என்று அறிவுரை தந்தார்.

**ஆர். எம். வீரப்பன்**

'காவல்காரன்' படப்பிடிப்பு முடிந்ததும் தயாரிப்பாளருக்கு ஒரு ரீலைப் போட்டுக் காட்டினோம். அதில் 'ரீ ரிக்கார்டிங்' சரியாக இல்லை.





இதைக் குறிப்பிட்ட இரு ஆர். எம். வி. அவர்கள் ''ஒரு கதையைப்படமாக்குகிறோம். புதிய கருத்துக்களைச் சொல்கிறோம். ஆனால் இந்த ரீலின் கதைக்கும் ரீ ரிக்கார்டிங்குக்கும் சம்பந்தமே இல்லை. வேறு விதமாக மாற்றியமையுங்கள். நமக்குச் செலவு முக்கியமில்லை. ஆனால் நாம் வெற்றியை அடைந்தே தீரவேண்டும்'' என்றார் தீர்மானமாக.

அவர் கூறியபடி அந்த ரீலுக்கு வேறு விதமாக இசையமைத்தோம். படத்தில் அந்த ரீலுக்குத்தான் ரசிகர்களின் பாராட்டு அதிகம்.

**சௌகார் ஜானகி**

''அதிர்ஷ்டம் அழைக்கிறது'' படப்பிடிப்பின் இடைவேளை.

சாப்பிட்டுக் கொண்டிருந்தோம்.

சௌகார் ஜானகி தமது வீட்டிலிருந்து விசேஷமாகத் தயாரித்து ஸ்டுடியோவுக்குக் கொண்டு வந்திருந்த சில அயிட்டங்களைப் பரிமாறிக் கொண்டிருந்தார்.

திடீரென்று ஓர் உதவியாளர் என்னருகே வந்து ஏதோ கிசுகிசுத்தார்.





சௌகார் அவரிடம், ''என்ன மத்தியானம் எடுக்கிற சீன் பற்றித்தானே கேட்க வந்தீர்கள்? அதுக்கு என்ன அவசரம்? எந்தப் பிரச்னை இருந்தாலும் மனுஷனுக்குச் சாப்பிடும்போது சந்தோஷம் இருக்கணும். மனுஷன் வாழ்க்கையில் கஷ்டப்படுவதே சாப்பிடத்தான். அந்தச் சில நிமிட சந்தோஷச் சூழ்நிலையை ஏன் கெடுக்கிறீர்கள்?'' என்றார்.

அன்றிலிருந்து இன்றுவரை சாப்பிடும் போது நான் வீணான டென்ஷனை வைத்துக் கொள்வதில்லை.

**பேட்டி: மன்னை சௌரிராஜன்**

இந்தியா-பாகிஸ்தான் முதல் கிரிக்கெட் டெஸ்டின் முதல் நாளன்று டெஸ்டைப் பார்க்க ஒரு பெண் கூட வரவில்லை. - ஏ. தங்கமுத்து



"இதை ஏம்மா என்கிட்ட சொல்லல்லே நீ? இப்ப டாக்டர் சொல்லி நான் உன்னை மிரட்டாமலிருந்தா விஷயமே தெரிஞ்சிருக்காதே?'' என்று கனிவுடன் கேட்டார் நடராஜ அய்யர்.

''சொல்றதுனால என்னப்பா பிரயோஜனம்? நீங்க அவரை என்ன செஞ்சுட முடியும்? கோபமா நாலு வார்த்தை பேசினீங்கன்னு உங்க வேலைதான் போகும். அநாவசியமா உங்களுக்கு மனக் கஷ்டம். விஷயம் வெளியே தெரியறதுனால நமக்கும் அவமானம். அவங்க வீட்டுப் பெண்களும் நல்லவங்க, மனசு கஷ்டப்படுவாங்க. அதையெல்லாம் யோசிச்சுத்தான் நான் சொல்லல்லே.''

''என்னால என்ன செஞ்சுட முடியுமா? காமிக்கிறேன் ராஜம் என்னால என்ன பண்ண முடியும்னு. அவன் பெரிய மனுஷனா இருந்தா எனக்கென்ன? எப்பப் பெரிய மனுஷன் பெரிய மனுஷனைப் போல நடந்துக்காம சின்னப் புத்தியைக் காட்டிட்டானோ அப்புறம் எதுக்காக நாம மரியாதையைப் பார்க்கணும்?''

''என்ன பண்ணப் போறீங்க? எனக்குப் பயமாயிருக்கு'' என்றாள் அவர் மனைவி.

''நீ எதுக்குப் பயப்படறே? ஒண்ணும் ஆகாது. வேலை போயிடும்னிறதுக்காகப் பயப்படறியா? வேலை போறதென்ன, நானே இந்த நிமிஷத்திலேயிருந்து அந்த வீட்டுக்கு வேலைக்குப் போறதில்லேன்னு தீர்மானம் பண்ணியாச்சு. என் கைல வலுவிருக்கு. தொழில் தெரியும். அப்புறம் என்ன? இந்த வீடு விட்டா வேற நாறு வீடு இருக்கு. நாம பட்டினி கிடந்து சாக மாட்டோம். வேறே இடத்துல வேலை கிடைக்காமயா இந்த வீட்டோட இவ்வளவு வருஷமா ஒட்டிண்டிருந்தேன்? ஒரு விசுவாசம்தானே? அந்த விசுவாசத்துக்குத் துரோகம் பண்ணிட்டானே பாவி.''

''போனாப் போறது விடுங்கோ. இவ தான் சாமர்த்தியமாத் தப்பிச்சுண்டு வந்துட்டாளே. ஒண்ணும் நடந்துடல்லியே'' நடராஜய்யரின் மனைவி பயந்து கொண்டே சொன்னாள்.

''என்னடி சொன்னே? ஒண்ணும் நடந்துடலியா? இன்னும் என்னடி நடக்கணும்? என் பெண்ணை அவன் தொட்டுட்டானே, அது போறாதாடி? மனசுல கெட்ட எண்ணத்தை வெச்சுண்டு தொட்டுட்டானே அந்தக் கையை முறிச்சு உலையில வெக்க வேண்டாமோ?''

''உங்க ஆத்திரம் எனக்குப் புரியறது. உங்களுக்கும் மேலே எனக்கும் ஆத்திரம்

ஹேமா ஆனந்ததீர்த்தன்



தான் வர்றது. ஆனா கொஞ்சம் நிதானமா யோசியுங்க. அவர் நம்ம பொண்ணு மேலயே திருப்பிட்டாலும் திருப்பிடுவார். இவதான் அவரை மயக்கினாள், கண் ஜாடை பண்ணிக் கூப்பிட்டாள்னு எதையாவது சொல்லிட்டார்னா அவங்க பேச்சுக்குத்தான் ஊர்ல மதிப்பு இருக்கும்.''

''அதெல்லாம் ஒரு மண்ணும் இல்லே. நம்ம ராஜம் எப்படிப்பட்டவங்கறது ஊர்ல யாருக்கும் தெரியாதா? இதுவரைக்கும் அவளைப் பத்தி ஒரு வம்பு தும்பு யாராவது பேசியிருக்காங்களா? அதே சமயத்துல சிவகுருவைப் பத்தியும் யாருக்குத் தெரியாது? பேட்டைக்கு ஒரு ஆசைநாயகியை வெச்சிண்டிருக்கான். இது ஊரெல்லாம் தெரிஞ்ச விஷயம்தானே?''

''அப்படிப்பட்ட பொம்பளை பொறுக்கினு தெரிஞ்சிண்டு அந்தவீட்ல நம்ம பொண்ணைத் தனியா அனுப்பிச்சது நம்ம தப்புத்தானே.''

''இவ்வளவு வயசான மனுஷன் இவகிட்ட ஒண்ணும் தப்பா நடந்துக்க மாட்டார்னு நம்பினேன். அதுவும் என் பெண்கிட்ட அப்படியெல்லாம் தப்பா நடந்துக்க மாட்டான்னு நம்பினேன். நம்பிக்கைத் துரோகம் பண்ணிட்டானே மனுஷன்.''

''நம்ம போறாத காலம்.''

''அவருக்கும் அதைவிடப் போறாத காலம் கறதைக் காட்டாம விட மாட்டேன். சரி, பேசிண்டிருக்க எனக்கு நேரமில்லே. ஆக வேண்டிய வேலையைக் கவனிக்கிறேன்'' என்று கூறி நடராஜய்யர் விடுவிடுவென்று வெளியே கிளம்பிப் போனார்.

யாரோ தன்னைத் தட்டி எழுப்புவதை உணர்ந்த சிவகுரு கண் விழித்துப் பார்த்தார். அறையில் விளக்கெரிந்து கொண்டிருப்பதையும் தமது படுக்கையைச் சுற்றி ஐந்தாறு பேர் நின்று கொண்டிருப்பதையும் கண்டார். அந்த ஐந்தாறு பேரில் ஒருவர் நடராஜய்யர் என்பதை அறிந்ததும் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தார்.

''என்ன நடராஜய்யர், என்ன இதெல்லாம்?'' என்று மிரண்டு போய்க் கேட்டார்.

''அங்கே பாருங்கோ எல்லாம் புரியும்!'' என்றார் நடராஜய்யர்.

அவர் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்த சிவகுரு அங்கு தாம் கண்ட காட்சியால் உறைந்து போய் விட்டார்.

உமாவும், விஜயாவும் நாற்காலிகளில் உட்கார வைக்கப்பட்டு அவர்களுடைய கைகள் முதுகுக்குப் பின்னால் நாற்காலியின் முதுகோடு சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. இருவரின் வாயிலும் துணி அடைக்கப்பட்டிருந்தது. இருவர் கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.



''என்ன இது அக்கிரமம்? இவங்கல்லாம் யார்? எங்களை என்ன செய்யப் போறிங்க? கொன்னையடிக்கப் போறிங்களா?''

''இவங்கல்லாம் என் தொழில்ல இருக்கற என்னோட ஃப்ரண்ட்ஸ் எனக்கு உதவி பண்ற துக்காக வந்திருக்காங்க. அவங்களை வீட்டுக்குள்ள வரவிடறதுக்காகக் கதவைத் திறந்து விடறதுக்காகத்தான் ராத்திரி நான் இங்கியே படுத்துண்டேன். கொன்னைதான் அடிக்கப் போறோம் ஆனால் பணம், காசு, நகை நட்டெல்லாம் எங்களுக்கு வேண்டாம் எங்களுக்கு வேண்டியது – தப்பு –எனக்கு வேண்டியது ஒரே ஒரு வஸ்து. அதுதான் உங்க மக விஜயா.''

''அய்யர்'' என்று சிவகுரு பல்லைக் கடித்துக்கொண்டு கத்தினார்.

''சும்மா கத்தாதேய்யா, அதனால ஒண்ணும் பிரயோஜனமில்லே. பழிக்குப் பழி. அப்பத்தான் என் ஆத்திரம் அடங்கும்!''

''வேண்டாமய்யா நடராஜய்யர், உம்ம கால்ல வேணாலும் விழறேன்யா! என்னை வேணா செருப்பாலடிங்க நீங்க எல்லோரும் ஆளுக்கு ரெண்டடி. அடிச்சாலும் பட்டுக்கறேன். ஆனா என் விஜயாவைமட்டும் ஒண்ணும் பண்ணிடாதிங்க. அதுக்கப்புறம் அவளும் உயிரோட இருக்க மாட்டா. நானும் உயிரோட இருக்க மாட்டேன். அவ என் உசிரு. அவளுக்கு எந்த ஆபத்து வர்றதையும் பார்த்துட்டு என்னால சகிச்சுக்கவே முடியாது, நடராஜய்யர்! என் நெஞ்சு பகீர்னு வெடிச்சுடும்'' என்று சிறு குழந்தை போல் சிவகுரு அழத் தொடங்கினார்.

''இந்த புத்தி அன்னிக்கு எங்கே போச்சு? உனக்கு உன் மகள் எப்படியோ அப்படித்தானே எனக்கு என் மகள். இப்பநீ பதறுறப்பல தானே நானும் பதறினேன் – நீ செஞ்ச அக்கிரமத்தைக் கேட்டு.''

''என்னை நம்புங்க நடராஜய்யர். அன்னிக்கு ஒண்ணுமே நடக்கல்லே. ராஜத்தை நான் ஒண்ணுமே பண்ணல்லே.''

''சீ, பேசாதே. அவ உன் கண்ணுல மிளகாய்ப் பொடியைத் தூவிட்டு ஓடலேன்னு நீ அவளைச் சும்மா விட்டிருப்பியா? நம்பிக்கைத் துரோகி'' என்று கூறிவிட்டு நடராஜய்யர் விஜயாவை நெருங்கினார்.

''விஜயா, உன் வாயிலிருந்து துணியை எடுத்துடறேன். கத்திக் கித்தி ஆர்ப்பாட்டம் பண்ணினியோ மறுபடியும் துணியை அடைச்சுடுவேன்'' என்று கூறி அவள் வாயிலிருந்த துணியை இழுத்தெறிந்தார்.

''மாமா, என் கைகளையும் அவுத்து விட்டுட்டிங்கன்னா உங்க கால்லேவிழுந்து வணங்க சௌகரியமா இருக்கும். எங்கப்பா – இல்லே எங்கப்பான்னு சொல்லிக்க எனக்கு இஷ்டமில்லே – இந்த சிவகுரு செஞ்ச அக்கிரமம் எனக்குப் புரிஞ்சு போச்சு. அதுக்குப் பழி வாங்க நீங்க துடிக்குறீங்க. அதுக்காக அவரோட மகளைக் கெடுக்க வந்திருக்கீங்க. ஆனா நீங்க பெரிய தப்புப்பண்றீங்க. நான் அவரோட மக இல்லே. அவரோட மக நாலு நாளைக்கு முன்னாடி டில்லியிலே செத்துப் போயிட்டா. ஒரு பெண்ணுக்கு உயிரை விட மானம் பெரிசு. அன்னிக்கு என் மானத்தைக் காப்பாத்தினதுனால எனக்கு உசிரைக் கொடுத்த நீங்கதான் இப்ப எனக்கு அப்பா. அப்பா, நான் உங்க மக. நான் உங்க மக'' என்று கதறிவிட்டாள்.

''விஜயா என்னை மன்னிச்சுடும்மா ஆத்திரம் என் கண்ணை மறைச்சிடுத்தம்மா'' என்று கண்ணீர் பெருக்கியவாறே நடராஜய்யர் விஜயாவின் தலைமீது கை வைத்து அன்புடன் தடவிக் கொடுத்தார். அவள் கை கயிறின் கட்டுக்களையும் அவிழ்த்து விட்டார்.

தன் சகா ஒருவரிடம் உமாவின் வாய்த் துணியையும் எடுத்து, கைக் கட்டையும் அவிழ்த்து விடும்படி சைகை காட்டினார்.

அதேபோல் உமாவின் கட்டுகள் அவிழ்த்துவிட்டதும் அவள் சிவகுருவின் அருகில் சென்று வெறுப்புடன் அவரை ஒரு பார்வை பார்த்துவிட்டு ''சீ'' என்று ஒரே ஒரு எழுத்தைத் துப்பிவிட்டு வெளியேறினாள்.

''நீயும் போம்மா, விஜயா போய்ப் படுத்துக்க'' என்றார் நடராஜய்யர்.

''இருபது வருஷம் என் அப்பாவா இருந்துவிட்ட ஒரே காரணத்துக்காக உங்களை நான் அவமானப்படுத்த விரும்பவில்லே. இல்லாவிட்டா இந்த மூஞ்சி மேலே துப்பியிருப்பேன்'' என்று கூறிவிட்டு விஜயா வெறுப்புப் பார்வையைத் துப்பிவிட்டுப் போனாள்.

''விஜயா மாதிரிதான் நானும் சொல்ல வேண்டும். முப்பது வருஷமா இந்த வீட்டுச் சோத்தைத் தின்னவன் நான். அந்த நன்றி உணர்ச்சி மட்டும் இல்லாட்டா உங்க மூஞ்சியில காறித் துப்பத் தயங்கியிருக்க மாட்டேன். இனிமேலாவது இந்த மாதிரி அக்கிரமத்துக்கெல்லாம் துணியாதீங்கோ'' என்று கூறி நடராஜய்யர் தம் சகாக்களையும் அழைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றார்.

பிரபல தொழிலதிபர் சிவகுரு தமது படுக்கையறையில் இறந்து போயிருந்ததை இன்று காலையில் அவருடைய வீட்டார் பார்த்தனர். பரிசோதனை செய்ததில் அளவுக்கதிகமாகத் தூக்க மாத்திரைகள் சாப்பிட்டுத் தற்கொலைசெய்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது. தற்கொலைக்கான காரணம் தெரியவில்லை.

இந்தச் செய்தி பத்திரிகைகளில் வெளியான இரண்டு நாட்களுக்குப் பிறகு சிவகுருவின் நண்பர் மகாதேவனுக்கு அவர் எழுதிய

**பூர்ணிமா போடும் புதிர்**



விடை:

1. கடவுளுக்கு ஒரு கடிதம்
2. மூன்று முகம்
3. மெட்டி
4. அர்ச்சனைப் பூக்கள்
5. அம்மா
6. தொட்டால் சுடும்
7. அவள் ஏற்றிய தீபம்
8. காதோடுதான் நான் பேசுவேன்

ஒரு கடிதம் வந்தது. தூக்க மாத்திரைகள் சாப்பிடுவதற்கு முன் அந்தக் கடிதத்தை எழுதி, தாமே வீட்டுக்கு வெளியே சென்று தெரு முனையில் இருந்த தபால் பெட்டியில் அவர் போட்டுவிட்டு வந்தது யாருக்கும் தெரியாது.

கிளப்பில் மகாதேவன் அந்தக் கடிதத்தைக் கௌதமனுக்கும் தணிகாசலத்துக்கும் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தார்.

சிவகுரு எழுதியிருந்தார்.

''...இந்தக் கடிதம் உன் கையில் கிடைக்கும்போது நான் இந்த உலகை விட்டு மறைந்திருப்பேன். காரணம் பெண்ணாசை. அடிக்கடி என்னிடம் சொல்லியிருக்கிறாய், பணத்தினால் இஷ்டப்பட்ட எல்லாப் பொம்பளையையும் அடைந்துவிட முடியாது. அப்போது வேறு வழிகளில் தன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்து கொள்ளத் தோன்றும். அது எங்கே கொண்டுபோய் விடும் என்று சொல்ல முடியாது என்று. என் விஷயத்தில் அது உண்மையாகி விட்டது. என் சொத்து முழுவதையும் காட்டிக்கூட ஒரு பெண்ணை என்னால் அடைய முடியவில்லை. எனவே பலாத்காரத்தில் இறங்க வேண்டியதாயிற்று. அது விளைவித்த விபரீதம் — என்னால் தாங்க முடியாததாகப் போய்விட்டது. உயிருக்குயிராய் நான் அன்பு காட்டிய மகள், மனைவி, விசுவாசமுள்ள ஊழியன் இவர்களுக்கெல்லாம் அருவருப்பூட்டக் கூடிய ஜந்துவாகி விட்டேன். அதை என் இதயம் தாங்க முடியாமல் உடைந்து விட்டது. எனவே வாழ்வை முடித்துக் கொள்கிறேன். நெறி தவறிய பெண்ணாசைக்கு வயப்படுகிறவர்களுக்கு ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் இதுதான் முடிவாக இருக்குமென நினைக்கிறேன்....''

கடிதத்தைப் போலீஸில் ஒப்படைத்துவிட வேண்டும் என மகாதேவன் எழுந்து சென்றார்.

**(முற்றும்)**

நாடக விமரிசனம்

# தொடரும் அத்தியாயம்

உலகில் எந்தப் பொருளையும் ஒரு விலை கொடுத்து வாங்கிவிடலாம் என்ற மமதையான கொள்கையுடைய பணக்காரர் சந்தோஷ், நண்பனையேகூட ஏமாற்றிப் பணம் பறிக்கும் பேராசைக்காரர். தம்மால் ஏமாற்றப்பட்ட நண்பனின் மகளையே காதலித்து, தம் மகன் அவளைத்தான் திருமணம் செய்து கொள்வேன் என்கிறபோது தீட்டுகிறார் திட்டம்; ஆனால் மருமகளாகப் போகிறவள் அவருக்கு மேல் திட்டம் தீட்டி அவரை வெற்றி கொள்கிறாள்.

தமக்கு ஒரு கண்டம் வர இருக்கிறது என்று குருவாயூர் பக்தர் சொல்லிக் கொண்டு வருகிறபோது அலட்சியப்படுத்தி, பிரசாதத் தட்டைத் தட்டி விடுகிறார். முதலில் அபிமான ரேஸ் குதிரை சாகிறது; அடுத்து வருகிறது கான்ஸர். அப்புறம் மனசு மட்டுமா, ஆளே அடியோடு மாறுகிறார். அவருக்கு நோய் குணமாகிப் பழையபடி ஆகிறவரை தான்! ஆரோக்கியம் திரும்பியதும் மமதையும் திரும்புகிறது. இது தொடரும் அத்தியாயம் என்கிறார் நாடகாசிரியர். கடைசிக் காட்சியில் சஸ்பென்ஸுக்கு ரசிகர்கள் தயாராய் இல்லாதபோது, மேடையில் அதை வழங்குவது பளிச்சென்று இருக்கிறது.

கலைமாமணி டி. எஸ். சேஷாத்திரியின் மறைவுக்குப் பிறகும், சாந்திநிகேதன் ஒரு சீரியஸ் நாடகத்தை (அலுப்புத் தட்டாமல்) மேடை ஏற்ற முடிந்திருக்கிறது என்றால் அதற்கு முதல் காரணம் கதாசிரியர்—வசனகர்த்தா 'பரத்'. அப்புறம்தான் நடிகர்—நடிகைகள் ராஜசேகர், எம். பானுமதி, பிரேமா, சைமன் எல்லாம்.

அசட்டுப் பிசட்டு என்று வெறும் துணுக்குத் தோரணங்களை மட்டும் கட்டி சபா நாடகம் என்றால் இத்தனை போதும் என்றிருக்கும் நாடகாசிரியர்கள், முடிச்சுகள் நிறைந்த நாடகத்தை நறுக்கான வசனங்களில் பிணைத்து வெற்றிகரமாக வழங்க, 'பரத்'திடம் விபூதி மந்திரித்து வாங்கிக் கொண்டால் கூடப் பரவாயில்லை என்று தோன்றுகிறது!

- சாருகேசி



# ரசிப்புகள் பல விதம்... ஆனால்...







































## எல்லோரும் ஒரே விதமாய் ரசிப்பது

# நரசுஸ் காபி!



ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

"தெர்மலோ" காபி!



**நரசுஸ் காபி கம்பெனி**

சேலம் 636 007.

கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/2166

# கம்பி நீட்டும் வேலைங்கறேன்!

● முன்னர் ஒரு முறை தலைவர் காமராஜர் நகைச்சுவையாகக் கூறினார் — ''எல்லா கிராமங்களுக்கும் மின் விளக்கு போட்டு விட்டோம் என்று பெருமை பேசுகிறார்களே, இது ஒரு பெரிய சாதனையா? இவர்கள் செய்யும் வேலை எல்லாம் கம்பி நீட்டுவதுதான்! மின்சார உற்பத்தியைக் கூடுதலாக்காமல் வெறுமனே கம்பியை மட்டும் நீட்டிப் பிரயோசனம் என்னங்கிறேன்!''

அன்று அவர் கூறியது எவ்வளவு உண்மை என்பது இன்றல்லவா தெரிகிறது! மின் உற்பத்தியைப் பெருக்காமல் 'கதை' அளந்து என்ன பயன்?

நேசன் சென்னை-61

● '9–1–83' தலையங்கம் பற்றி நீ காவிப் பானை ஊர்வலம் நடத்தினாயா? நான் தண்ணீர் பானை ஊர்வலம் வருவேன் என்கிற ரீதியில் போட்டி அரசியல் நடத்தும் தமிழக அரசு 'விழா' எடுப்பதில் காட்டும் அக்கறையை ஏழை வீட்டில் 'விளக்கு' எரிய வேண்டும் என்பதில் காட்டுவதில்லையே!... பிறகு தமிழகத்தை இருள் சூழாமல் என்ன செய்யும்?

மோ. க. இரத்தினசாமி மோகனூர்

● 'பரீட்சை விடைத்தாள்களில் மாணவர்கள் என்னவெல்லாம் எழுதுவார்கள்' என்ற தொகுப்பைப் படிக்கும்போது எனது நண்பன் என்னோடு தஞ்சை சரபோசிக் கல்லூரியில் படிக்கும்போது (புதுமுக வகுப்பு) சர்வகலாசாலைத் தேர்வில் 'லாஜிக் பாடத்தில் 'வாட் இஸ் லாஜிக்' என்ற கேள்விக்கு 'இட் இஸ் எ மேஜிக்' என்று ரத்தினச் சுருக்கமாய்ப் பதிலெழுதி அமர்க்களப் படுத்தியதை என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை.

அ. சிங்காரவேலு விருத்தாசலம்

● புஷ்பா தங்கதுரை தொடர் கதைகள் மூலம்தான் எங்களைத் திகைக்க வைக்கிறார் என்றால், 'சங்கிலித் திருடன்' சிறுகதையில் வரும் 'யமஹா' இளைஞன் மூலம் எங்களைப் பயமுறுத்தும் யமகாதகனாகி விட்டாரே!

தி. உமாப்திராஜா புதுச்சேரி

● ''கவிதைக் கொத்து'' பகுதியில் இளம் கவிஞர்கள் எழுதிய கவிதைகளைச் சுவைத்துப் படித்தேன். ஒவ்வொரு கவிதையும் அழகானவை. பெயரைப் பார்த்துத்தான் இவர்கள் இளம் கவிஞர்கள் என்று தெரிந்து கொள்ள முடிந்தது.

கவிஞர் இலக்குமண சுவாமி மதுரை–5

● ''இசைத் துக்கடா'' பகுதியில் கிட்டத்தட்ட எல்லா சபா நிகழ்ச்சிகளையும் 'கவர்' செய்திருக்கிறீர்கள். தொகுப்பு ரத்தினச் சுருக்கமாகவும் தெளிவாகவும் வரையப்பட்டிருந்தது.

முரளி திருச்சி–14

● ஏனையா தொப்பை போட்டவரை வீட்டிற்கு அனுப்ப வேண்டும் என்றீரே? தொப்பை போட்டவர் (விஸ்வநாத்) 53 அடித்தாரே, இதற்கு என்ன கூறுகிறீர்?

நா. சூரியநாராயணன் சென்னை–51

● ஹலோ! சக்தி கமலேஸ்வரன்! எந்த உலகத்தில் இருக்கிறீர்கள்? இடையின் நீளம் 28 அங்குலமா? சுற்றளவு என்றல்லவா இருக்க வேண்டும்.

எஸ். சுப்பிரமணியன் மதுரை–3

● விகடன், குமுதம், தினமணிகதிர் என்ற பெயர்களைத் தலைப்புக்களாக வைத்துக் கதைகள் வெளியிட்டீர்கள். ஞானபூமி பத்திரிகையின் பெயரை தலைப்பாக வைத்து கதை வெளியிடவில்லையே என்று குறைப்பட்டேன். ஆனால் இந்த வாரம் (9–1–83) கல்கியைப் பார்த்தபின் அந்த குறையும் நீங்கி விட்டது. ஞானபூமி கதை மனத்துக்கு நிறைவாகவும் இருந்ததில் மகிழ்ச்சி.

தங்க. குஞ்சிதபாதம் மேலஞ்சிப்பட்டு

● ரூபாய்க்கு மூணு கொலை வெளியிடும் தங்கள் பத்திரிகையை, மெனக்கெட்டு ரூபாய் 1–20க்கு வாங்கும் எங்களை ஏமாற்றாமல் கதை நல்லாவே இருந்தது.

சி. இராம்கோபால் திருவாரூர்

● வியட்நாம் வீடு சுந்தரத்தின் காலத்திற்கேற்ற கருத்துச் செறிவான வசனங்கள் மிக அருமை.

சி. சௌந்திரபாண்டியன் கிருஷ்ணகிரி



ஏதை எதிர்பார்த்து வெங்கடாசலம் ஊரிலிருந்து வந்தானோ, அது நடந்துகொண்டிருந்தது. முதல் பார்வையிலேயே மாமாவின் பிடிவாதத்தில் மாறுதல் இல்லை என்று புரிபட்டு விட்டது.

சுவரோரமாக மாமா உட்கார்ந்திருந்தார். அருகில் ஒரு பாட்டிலில் பச்சை நிற எண்ணெய்... இடக்கையால் அதைச் சாய்த்துச் சாய்த்து, வருகிற எண்ணெயை வலது கையிலும் நீட்டியிருந்த காலிலும் அழுந்தத் தடவி....

முதுகை வளைத்து வளைத்து இப்படி ஒரு ஏழெட்டுத் தடவலுக்குப் பின் ஆயாசத்துடன் சுவரில் சாய்ந்து கொண்டார். நிழலாடியதைப் பார்த்து நிமிர்ந்தவர் பார்வையில் இவன் பட்டான்.

''...எங்கடா வந்தே...?''

''...சும்மாத்தான். பட்டணத்துக்கு வந்து நாளாச்சேன்னு....''

''...நான் சொல்றேன்டா... இங்கேயிருந்து குடித்தனக்காரன் எவனோ எழுதியிருக்கான்... உங்க மாமா படுத்துட்டார்... பக்கவாதம் வந்து வலது கால் சுத்தமா இழுத்துண்டுடுத்து.. கையும் காலும் அரை குறையா இருக்குன்னு... மாமாவைத் தாங்கறதுக்காக உடனே நீ ஓடிவந்திருக்கே.. நிஜந்தானே.....?''

'சடசட'வென்று பின் பக்கம் எலெக்ட்ரிக் ரயில் வேகமாகப் போகும் ஓசை...

நீட்டியிருந்த வலது காலுக்குக் குனிந்--, குனிந்து மாமா மீண்டும் எண்ணெய் தடவ ஆரம்பித்தார்.

''இது என்ன.... கோட்டக்கல் எண்ணெயா?''

''ம்....''

''நான் வேணா தடவி விடட்டுமா...?''

''வேண்டாம்டா.... ஊ.....''

வெங்கடாசலம் அதிர்ந்து போனான். மாமாவின் குணம் தெரிந்திருந்ததால், நேற்று இரவு ரயிலில் வரும்போதே நைச்சிய



மாக அவரிடம் எப்படிப் பேச வேண்டும் என்பதை யோசனை செய்து சரிபார்த்து... ஒத்திகை பார்த்து... இவ்வளவு பண்ணியும் கடைசியில் இசைகேடாகப் பேச்சை ஆரம்பித்தாயிற்று.

''இப்ப இப்ப உட்கார்ந்தே சமைக்க முடியறது....ஒம்பது ஒம்பதரைக்குள்ளே சமைச்சுடறேன். ஒரு பிடி சாப்பிடு... நன்னுத் தூங்கு.... வேறே காரியம் ஏதாவது இருந்தாப் பாரு... ராத்திரி மெயிலைப் பிடிச்சு ஊரைப் பார்க்கப் போய்ச் சேரு... உனக்குத் தெரியும் இல்லியா... எதற்கும் ஒருத்தர் உதவி எனக்குத் தேவையில்லை...''

''பத்துப் பதினைஞ்சு நாள் போல இங்கே தங்கித்தான் ஆகணும்... நீங்க விரட்டினால் கூடப் போக முடியாது. கல்யாணிக்கு ஒரு ஜாதகம் வந்திருக்கு. பொருத்தமா இருக்கு. நான் வந்ததே அதற்காகத்தான்...''

'...இது நிஜமில்லை நிஜமில்லை' என்று உள்ளத்துக்குள்ளே ஒரு குரல் அலறிற்று. தெரிந்தது. ஆனால் இப்படி ஒரு சப்பைக் கட்டு இல்லாவிட்டால் க்ஷண நேரம் இங்கே இருக்க மாமா விடமாட்டார்.

இதற்கு மாமாவிடமிருந்து மறுப்பு இல்லை.

சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டு வெங்கடாசலம் பின்பக்கம் வந்தான்.

கிணற்றடியில் பக்கெட் பக்கெட்டாகத் தண்ணீரை இழுத்து விட்டுக் கொண்டிருந்த குடித்தனக்காரர் ஒருவர் ''எப்ப வந்தே'' என்று இவனைக் கண்களாலேயே விசாரித்தார்.

''நேத்திக்குத்தான். உங்க கடுதாசு கிடைச்சுது. உடனே புறப்பட்டு விட்டேன்...'' என்றான்.

''சரியான குறக்களியய்யா உங்க மாமா.... ஆஸ்பத்திரியிலே பத்து நாள் இருக்கறதுக்குள்ளே கூத்துக் கட்டி அடிச்சுப்பிட்டார். வீட்டுக்கு வந்தா இன்னொரு கூத்து...



உடம்பு தெம்பா இருக்கிறபோது மனுஷன் எப்படி வேணு இருக்கலாம். கைகால் இழுத்துண்ட அப்புறமும் பழையபடி 'ஒண்டியாவே எல்லாத்தையும் பார்த்துப்பேன்... நீ உன் வேலையைப் பாரு'ன்னு... இந்தக் கண்றாவியைப் பார்க்கச் சகிக்கல்லே...உமக்கு எழுதினேன்....''

குடித்தனக்காரர் ஈரத் துண்டைப் பிழிந்து தலையைத் துவட்டிக் கொள்ள ஆரம்பித்தார்.

அம்மாவின் சொந்தத் தம்பி இந்த மாமா. சின்ன வயதிலேயே சுவிகாரம் போய் விட்டார். அதற்காக உறவு அறுந்துவிடவில்லை. நிறையச் சொத்து இருந்தது. மாமாவின் மனம் அக்கா குடும்பத்தோடு மட்டும் நின்று விடவில்லை. அது பொதுவுடைமை—பொதுவுடைமை என்று அலறுகிற மனம். வஞ்சனை இல்லாமல் ஊர் உலகத்துக்கெல்லாம் அள்ளி விட்டது.

புத்தகங்கள் என்றால் பாடப் புத்தகங்கள் மட்டும்தான் என்று இருந்த காலம். திண்ணைக்குப் போனால் அப்பா விரட்டுவார்... உள்ளே வந்தால் அம்மா பிடுங்குவாள்... எப்பொழுதும் பாடப் புத்தகமும் கையுமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிற பெற்றோர்க்கிடையே மாமா கலக்காமல் நின்றார். அவரிடம் நிறையப் புத்தகங்கள் இருந்தன. எந்தப் புத்தகத்தையும் யார் வேண்டுமானாலும் எடுக்கலாம்... படிக்கலாம்...

அங்கே போய்விட்டு வந்தது தெரிந்தால் அப்பா குதிப்பார்.

''அவன் சுத்த நாத்திகண்டா... எல்லாத்தையும் அறுத்து எறிஞ்சுப்பிட்டு வெறும் உடம்போட நிற்கிறான். அவனோட சேர்ந்து நீயும் தறுதலையாத்தான் இண்டாடப் போறே...''

வயது ஆக ஆக வெங்கடாசலத்துக்கு விவரம் புரிந்தது. மாமாவுக்குச் சாமி கிடையாது.. கோவில் கிடையாது.. ஜாதி கிடையாது....

---

''நம்பினவங்களைக் கை விடாத ஆளுங்க அவரு!''

''அப்படியா? எங்கே வேலை பாக்கறார்?''

''சர்க்கஸ்லே 'பார்' ஆடறாரு!''

—அ. வசந்தா



இதற்கு அம்மா காட்டும் காரணம் வேறு மாதிரியாக இருந்தது.

''...அவன் முரடனு போனதுக்கு இவா தான் காரணம்... சின்ன வயசிலேயேசுவிகாரம் போயிட்டான்... கன்றுக்குட்டியைத் தாய்ப் பசுக்கிட்ட யிருந்து இழுத்துண்டு போற மாதிரி' — அம்மா அம்மானு கதறக் கதற அந்தக் குழந்தையைத் தூக்கிண்டு போயிட்டா... அவன் அடம் பிடிச்சு அழுது தேம்பி... அவன் வளர வளர மனுஷா மேலே இருக்கிற கோபத்தை யெல்லாம் தெய்வத்துக்கிட்டக் காட்ட ஆரம்பிச்சுட்டான்... கல்யாணம்னு ஒண்ணு பண்ணிண்டான்னு பொறுப்பு வரும். இந்த வேகம் குறையும். மாட்டேங்கறானே...'' என்று அம்மா அங்கலாய்ப்பாள்.

வெங்கடாசலத்துக்கு ஒன்று மட்டும்நிதர்சனமாகத் தெரிந்திருந்தது.

...மாமா வித்தியாசமானவர். உலகத்தை—மனிதர்களை அவர் பார்க்கும் கோணங்கள் வேறுபட்டவை. அசாதாரணமானவை... சராசரி மனிதன் மாதிரி, பார்க்க— நினைக்க,— பழக அவருக்குத் தெரியாது... வராது....

குளித்துவிட்டு வெங்கடாசலம் உள்ளே நுழைந்தபோது மாமா அடுப்பைப் பற்ற வைத்திருந்தார். அரிசி, பருப்பு எல்லாம் வரிசையாகத்தரையிலேயே இருக்க, நகர்ந்து நகர்ந்து சென்று ஒவ்வொன்றாக எடுத்து...

வெங்கடாசலம் அவரிடம் கோபித்துப் பார்த்தான்....

''இது என்ன கண்றாவி மாமா...''

''எது?''

''இப்படி இருக்கிறதுதான்... அது என்ன பிடிவாதம்... தானாகவே எல்லாத்தையும் செஞ்சுக்கணும்னு.. அதுக்காக முழுக்க முழுக்க மனுஷா ஒத்தாசை இல்லாமலேயே காலத்தை ஓட்டிட முடியுமா? தனியா ஒரு நிலிலே மாட்டிண்டு படற வேதனையை இந்தப் பட்டணத்திலே — மாம்பலத்திலே படுவானேன்...''

மாமா பதில் சொல்லவில்லை. சிரித்தார். பார்வையை மெல்ல மெல்லச் சுவரில் மாட்டியிருந்த ஓர் ஓவியத்திடம் கொண்டு சென்றார்.

''...இந்தப் படத்தைப் பார்த்தியா?''

படத்தில் ஒரு பெரிய யானை இருந்தது. நீண்ட தந்தம்... உயரம்... கிழ யானையாக இருக்கலாம். உடம்பெல்லாம் வற்றி, தளர்ந்து, எலும்பு துருத்திக் கொண்டு நின்றது. முழங்காலுக்குக் கீழே தெரியவில்லை. கீழே 'சொத சொத'வென்று சேறு தெரிந்தது. கால்கள் சேற்றில் புதைந்திருக்கலாம். அந்த யானை கொஞ்சம் கொஞ்சமாகச் சேற்றில் அமிழ்கிறது போல் ஒரு தோற்றம்....

''படத்தில் என்ன தெரியறது?''

வெங்கடாசலம் திரும்பி மாமாவைப் பார்த்தான். இவ்வளவு நேரம் யானையையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுச்சட்டென்று திரும்பினதில் மாமாவுக்குப் பதில் அங்கே ஒரு கிழ யானை நிற்பது போல் ஒரு பிரமை... தலையை உலுக்கிக் கொண்டான்.

''தெரியல்லே...''

''இதுதான் யானை சுடுகாடு...''

இவன் புரியாமல் அவரைப் பார்த்தான்.

''...எல்லா ஜீவராசிகளும் பிறக்கிறது... வளர்கிறது. பருவம் வரது...மூப்பும் வரது.. அவதிப்படறது... அப்புறம் சாகிறது.... ஆனால், யானைக்கு மாத்திரம் ஒரு குணம் உண்டு. இயற்கை உணர்வு உண்டு... மூப்பு வந்துட்டா அப்புறம் வாழுறதும்னு நினைக்கிறது இல்லே. உடம்பிலே தெம்பு இல்லாம மற்றவர்கள் பாதுகாப்பில், உதவியில் வாழ்ந்து, மந்தைக்கு ஒரு இடைஞ்சலா இருக்கிறதை விட உயிர் துறக்கிறது மேல்னு போயிடுமாம். அடர்ந்த காட்டில் — ஒருத்தரும் போக முடியாத ஒருஇடத்தில்,இப்படி ஒரு யானை சுடுகாடு இருக்கு... கூட்டத்தை விட்டு விலகி வந்த யானை இந்தப் புதை சேற்றில் இறங்கி, கொஞ்சம் கொஞ்சமா உள்ளே அமுங்கி....ச்சு.... வெங்கடாசலம் இதற்குக்கூட அந்த யானை இன்னொருத்தர் தயவை எதிர்பார்க்கிறது கிடையாது...''

வெங்கடாசலம் வாயைப்பிளந்துகொண்டு நின்றான்.... அதிசயம்தான்... மாமா எதற்காக இதைச் சொல்லுகிறார்என்பது புரிந்தது.

**வெ**ங்கடாசலம் வந்து விளையாட்டுப் போல் ஏழெட்டு நாட்கள் ஆகிவிட்டன. இந்த ஏழெட்டு நாட்களில் மெல்ல மெல்ல சமையற் கடையைப் பிடித்துக் கொண்டு விட்டான். மாமாவும் சுலபத்தில் அதை விட்டுவிடவில்லை. ''உனக்கு என்னடா இங்கே வேலே... போடா... போடா...'' என்று விரட்டினார். சமைத்து வைத்துக் கொண்டு கூப்பிட்டால் சாப்பிட மாட்டேன் என்று அடம் பிடித்தார்.

கல்யாணியின் கல்யாணத்தைப் பற்றிச் சொன்னதை வெங்கடாசலம் மறந்துவிட்டான்.... கடை. கண்ணி போய் வந்தான். மாமாவுக்குப் புத்தகம் படித்துக்காட்டினான். பேப்பரில் ஒன்று விடாமல் அவருக்குப் படித்துச் சொன்னான்.

**ஒ**ரு நாள் காலையில் எழுந்து குளித்து, அடுப்பு மூட்டி, காப்பி கலந்து மாமாவிடம் எடுத்து வந்த வெங்கடாசலம் ஒரு விநாடி திகைத்துப் போனான்.

படுக்கையில் மாமா இல்லை.

லெவல் கிராஸிங் அருகே கூட்டமாகத் தெரிந்தது. போட்டது போட்டபடியே கிடக்கத் தலைதெறிக்க இவன்அங்கேஓடினான்.

அந்தக் கூட்டத்தின் நடுவே மாமா உட்கார்ந்திருந்தார். ஒரு ரிக்ஷாவைப் பிடித்து அதில் அவரை ஏற்ற இரண்டொருவர் முயன்று கொண்டிருந்தனர்.

''மாமா...!''

''யாருய்யா, உனக்குத் தெரிஞ்சவரா?''

''ம்....''

''உடம்பு முடியாதவங்களைப் பாத்துக்கிற லட்சணமாய்யா இது...!''

இவன் பதில் சொல்லவில்லை.

''என்ன ஆச்சு மாமா?''

மாமாவை ரிக்ஷாவில் உட்கார வைத்து விட்டார்கள்.

''கையிலே குச்சி எடுத்துண்டு வந்தேன் இருக்கா பாரு.''

வெங்கடாசலம் அந்தப் பாதையை—இரும்புக் கம்பிகளை — தண்டவாளங்களை — சரளைக் கற்களைப் பார்வையால் அலசினான்.

சற்றுத் தள்ளித் தண்டவாளங்களுக்கு இடையில் நறுக்கப்பட்டு, சிதைக்கப்பட்டு... குச்சியை யார் அவ்வளவு தொலைவு கொண்டு போனார்கள்?

கட்டைக்கு வந்தது குச்சியோடுபோயிற்று?

வீட்டுக்கு வந்ததும் மாமாவிடம் என்ன ஏது என்று விசாரிக்கவில்லை. எல்லாம் புரிந்த மாதிரி இருந்தது. மாமா மௌனமாகிவிட்டார். காப்பி சாப்பிட்டார். நகர்ந்து நகர்ந்து தம் காரியங்களை வழக்கம்போல் கவனித்துக்கொண்டார். தைலத்தைக் எடுத்து வலது கையால் காலில் சூடு பரக்கத் தேய்த்துக்கொண்டார்.

இரவு வந்ததும் அவர் படுக்கையை உள்ளே கொண்டு போட்டு ஃபானையும் போட்டான்.

''இன்னையிலேயே விரி.''

''உங்களை நான் எப்படி மாமா நம்ப முடியும்? நினைச்சிண்டா, இனிமேல் 'லெவல் கிராஸிங்' கிட்டே போயிடுவேன்,..''



நடிகையின் கணவன்: நான் ஒரு தப்புமே செய்யவில்லையே, என்னை ஏன் விவாகரத்து செய்யப் போகிறேன் என்கிறாய்?
நடிகை: சமீப காலமாக என்னைப் பத்தி செய்தி பேப்பர்களில் வரவில்லையே, அதனால்தான்.

—கே. கணேஷ்



அவன்: உன் காதலியும் நீயும் ஏன் பிரிஞ்சுட்டீங்க?

இவன்: 17ம் தேதி ஊரை விட்டு ஓடலாமா 27ம் தேதி ஓடலாமாங்கிற பிரச்னை பெரிய தகராறாயிருந்ததால் தான்!

— உ. ராஜாஜி

சொல்லிவிட்டு வெங்கடாசலம் சிரித்தான்.

''ஏய்... வார்த்தையாலே அடிக்காதேடா வேண்டாம். அது என்னால முடியல்லே... முடியாதுடா... ரொம்ப தைரியம் வேணும். யானை மாதிரி. நான் மனுஷன்தானே... அதுவும் கழுகு மாதிரி மனுஷன். எத்தனை வயசு ஆனாலும், கண் தெரிஞ்சாலும் தெரியாவிட்டாலும், பறக்க முடிஞ்சாலும் முடியாவிட்டாலும், பிடிவாதமா 'சாகமாட்டேன்'னு கழுகு இருக்கிற மாதிரி, நான் இருக்கப் போறேன்...'' வரவர மாமா குரல் கம்மித் தழுதழுத்தது. விநாடி நேரம் மௌனமாக இருந்தார். ''ரொம்ப நிர்மானமா இருந்தேன். உருண்டு பொறண்டாவது தண்டவாளத்திலே போய் விழுந்துடறதுன்னு மூனு மணிக்கெல்லாம் கிளம்பிட்டேன். குச்சியைத் தாங்கலா வைச்சிண்டு, இடது காலாலே நொண்டி நொண்டியே பாதி தூரம் போயிட்டேன். அப்புறம் முடியலே.... கீழே விழுந்துட்டேன். நகர்ந்து நகர்ந்து உடம்பை இழுத்துண்டு போயிட்டேன். உடம்பிலே ஒரு வேகம், வெறி... தண்டவாளத்தோட கொஞ்ச தூரம் போய் நடுப்பற உட்கார்ந்துண்டேன். ...நல்ல இருட்டு.... ரயில் வரும் வரும்னு காத்துண்டிருந்தேன். எதிர்த்தாற்போல சின்னதா ஒரு வெளிச்சம் தெரிஞ்சு, அப்புறம் பெரிசாகி... ஓ... ரயில்! உடம்பானு பேயாட்டம் ஆடறது. தப்பிக்கத் துடிக்கிறது. இங்கேயே, உட்கார்ந்திரு இன்னும் கொஞ்ச நேரம் தான்'னு மனசு சொல்றது.... ரெண்டும் மாத்தி மாத்தி சொல்லச் சொல்ல... எல்லாம் சித்த நாழிக்குள்ளே... ரயில் கிட்டே வர வர உடம்புக்கும் மனசுக்கும் நடக்கிற சண்டையும் பெரிசாகி... பெரிசாகி....கடைசியிலே.... ச்சு.... உடம்பு எப்படியோ உருண்டு பொறண்டு வெளியில் வந்து விழுந்து ஜெயிச்சுடுத்து. மனசு. அந்தக் கொஞ்ச நாழியிலே வாங்கியிருக்கிற அடிக்கு இன்னும் ரொம்ப நாளைக்கு எழுந்திருக்காது. நீ பயப்பட வேண்டாம்....''

வெங்கடாசலம் வாய் திறக்காமல் உட்கார்ந்திருந்தான். மாமாவைப் பற்றி நினைத்திருந்ததெல்லாம் தலைகுப்புற விழுந்து நொறுங்கிக் கொண்டிருந்தது.

''கேட்டுக்கு இந்தப் பக்கம் மரத்தடியிலே ஒரு சின்னப் பிள்ளையார் இருக்கு. எல்லாரும் அங்கே சற்று நின்னு தோப்புக்கரணம் போட்டு.... நானும் அவரைப் பார்த்தேன். எனக்குப் பிள்ளையார் மாதிரி தெரியல்லே... இந்தப் படத்திலே இருக்கிற யானையைப் பார்க்கிற மாதிரி தோணித்து... தன்னுடைய கடைசி காரியத்தைக் கூட சுயமாச் செஞ்சுக்கிற யானை! அந்... ஒரு மன உறுதி வேணும்கிறதுக்காகத்தான் எந்தக் காரியத்தைத் தொடங்கும்போதும், யானை முகத்தை நினைச்சுட்டு ஆரம்பிக்கிறாங்களோன்னு பட்டுது. கொஞ்சம் பிரமிப்பா இருந்தது. தோற்றவன் ஜெயிச்சவனைப் பார்க்கிற பிரமிப்பு... அந்தப் பிரமிப்பில் என்ன செஞ்சேன் தெரியுமா...! 'உன்னை மாதிரி எனக்குத் தைரியம் இல்லே. நான் ரொம்பவும் பலவீனமானவன்... தப்பிக்க முடியல்லே! எத்தனை சீக்கிரம் முடியறதோ அத்தனை சீக்கிரம் எனக்கு விடுதலையைக் கொடுன்னு கேட்டேன்.''

''யார் கிட்டே....? யானைகிட்டேயா?''

''பிள்ளையார்கிட்டேதான்....''

வெங்கடாசலம் விக்கித்து நின்றான்.

படத்தில் அந்தக் கிழ யானை மெல்ல மெல்லச் சேற்றில் அமிழ்ந்து கொண்டிருந்தது.

அரசன்: மந்திரியாரே! நகரச் சோதனைக்கு நீர் என்னை மாதிரி வேடம் போட்டுக் கொண்டு போய் வாருங்களேன்.

மந்திரி: வேண்டாம் பிரபோ! தங்களைக்கொலை செய்யும் முயற்சிகள் அடிக்கடி நடக்கும் நேரத்தில் எதற்கு இந்த வம்பு...

—என். எஸ். வி. குருமூர்த்தி



# உருவங்கள் மாறலாம்

பிறருக்காகவே பிரார்த்திக்கும் பக்தனைக் கடவுள் பதினெட்டாம் மாடிக்கு வரச் சொல்லி, மானிடர்களுக்கு நடக்கப்போகும் தீமைகளை முன் கூட்டியே அவன் மூலம் சொல்ல வைத்து வேடிக்கை பார்க்கிறார். அவனோ அவர் சொல்லிக் கொடுத்த மாதிரியெல்லாம் சொல்லிப் பைத்தியக்காரப் பட்டத்தை வாங்கிக் கட்டிக் கொள்கிறான்.

கடைசியில் கள்ளக்கடத்தல் வழக்கில் சிக்கிக்கொண்டு சிறைக்குப்போக நேரிடும் பொழுது கடவுள் கோர்ட்டுக்கு வந்து சாட்சி சொல்லி அவனைக் காப்பாற்றுகிறார்.

ஆங்கிலத்தில் வெளிவந்த 'O! GOD' ஆதாரம் என்றாலும் அதை நம் நாட்டுப் பண்பாட்டிற்கு ஏற்பப் பக்குவப் படுத்தியிருப்பதில் புதிய நயம் தெரிகிறது.

கடவுளின் பூலோகப் பிரதிநிதியாக வருகிறார் மகேந்திரன். (இது அவருக்கு நாலாவது படம்) இவர் எழும்பூர் ரயில் நிலையத்திற்குச் சென்று பிரயாணிகளையெல்லாம் "போகாதீர்கள் போகாதீர்கள் இந்த ரயில் விபத்துக்கு ஆளாகப் போகிறது'' என எச்சரித்து ஏமாற்றமடையும் போதும்...

புத்திர சோகத்தைக் கடவுளின் தோளின் மீது முகத்தைப் புதைத்துக் கழுவும் போதும்... மனத்தைக் கசிய வைக்கிறார்.

இவரது மனைவியாக — கணவனைப்புரிந்து கொள்ளாதவராக வருகிறார் சுகாசினி. கதாபாத்திரத்தைப் புரிந்து கொண்டு நடித்திருக்கிறார்.

சிவாஜி கணேசன் கதர் சட்டை, மூக்குக் கண்ணாடி அணிந்து 'நான்தான் கடவுள்' என்கிற கௌரவ வேடத்தில் நடித்துள்ளார். நடிப்பிலும் கௌரவம்.

கமலின் டிஸ்கோ நடனமும் அதைப் படமாக்கிய விதமும் சிறப்பு.

ராகவேந்திர ஸ்வாமிகளின் பிரதிநிதியாக வரும் ரஜினிகாந்தின் சண்டைக்காட்சிகளைப் புதுமையான முறையில் படமாக்கியுள்ளார்கள்.

மனோரமா வரவழைக்கும் கொத்தவரங்காய் மழைக் காட்சி பகமை.

புதுமுகம் ராகவ் — மஞ்சரி இருவரும் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார்கள்.

தேங்காயும் மூர்த்தியும் கொஞ்சம் ஓவர்.

புதுமுகம் பிந்துகோஷ்? அசல் முட்டைகோஸ் — உருவத்தில்! இவர் ஆடும் தாம்பாள டான்ஸ் நல்ல தமாஷ்.

சிலுக்கேஸ்வரர் ரகுவும் எஸ். வி. ரமணனும் போலிச் சாமியார்களாக வந்து அசலாக நடித்துள்ளனர்.

ராம்ஜியின் உரையாடல்களில் நல்ல தத்துவ நீரோட்டம் தெரிகிறது.

எஸ். வி. ரமணனின் இசை இதமாக உள்ளது. கமல் நடனப்பாட்டும், சிலுக்கு நடனப் பாட்டும் ஹிட். டைரக்ஷனும் இவரே. கை சுளுக்கிக் கொள்ளப்போகிறது. ஜாக்கிரதையாகக் கை குலுக்குவது நல்லது.

- திரைஞானி



# கள்வனின் காதலி

## அத்தியாயம் 27

## பிள்ளைவாளின் பழி

கல்யாணியைப் பழி வாங்குவதற்குப் புலிப்பட்டி ரத்தினம் அநேக குருட்டு யோசனைகள் செய்து விட்டுக்கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான். தாமரை ஓடைப் பண்ணையின் நிலங்களைப் பலாத்காரமாய்த் தான் வசப்படுத்திக்கொண்டு விடுவதென்றும், கல்யாணியைக் கோர்ட்டுக்குப் போகும் படியாகவோ தன்னுடன் ராஜி பேச வரும்படியாகவோ செய்து விடுவதென்றும் தீர்மானித்தான்.

பண்ணையின் நிலங்கள் எல்லாம் அந்த வருஷம் நன்றாய் விளைந்திருந்தன. அறுவடையாகி விட்டது. ஆனால் நெல் எல்லாம் இன்னும் களத்திலேயே கிடந்தது. களத்திலிருந்த படியே நெல்லை விற்றுவிடுவதா அல்லது எடுத்துக் கொண்டு போய்ச் சேர் கட்டி வைத்திருப்பதா என்பதைப்பற்றிக் கல்யாணி



யோசனை செய்து கொண்டிருந்தாள்.

நெல்லைப் போட்டு விடும்படியாக நெல் வியாபாரி ஒருவன் வந்து அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தான். பண்ணையின் காரியஸ்தருக்கு இது பிடிக்கவில்லை. ''நம்முடைய பண்ணையில் எப்போதும் ஆனி மாதத்திலேதான் நெல்லுப் போடுகிற வழக்கம்'' என்று அவர் சொன்னார்.

இம்மாதிரி அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், ஒரு ஆள் குடல் தெறிக்க ஓடி வந்து. ''ஆச்சி! மோசம் வந்துட்டுது!'' என்று அலறினான். என்னவென்று கேட்கவும். ''புலிப்பட்டி ஆட்கள் வந்து களத்திலிருக்கும் நெல்லை அள்ளுறானுங்க. இருபது முப்பது வண்டி வந்து கிடக்கு. தடியுங்கையுமாய் நூறு ஆட்கள் வந்து நிக்கிறானுங்க. எல்லாரும் நன்னாப் புட்டி போட்டுட்டு வந்திருக்கானுங்க. கிட்ட வந்ததால் மண்டையை உடைச்சுடுவேன்என்கிறானுங்க. பாருங்க, அங்கே புடிச்ச ஓட்டம் இங்கே வந்துதான் நின்னேனுங்க'' என்றான்.

அதைக் கேட்ட காரியஸ்தர் முதலியார் ''ஐயோ!'' என்று அப்படியே உட்கார்ந்து போய் விட்டார். அவர் சாது மனுஷர். பண்ணையாரின் காலத்தில் இம்மாதிரிச் சங்கடம் ஒன்றும் நேர்ந்தது கிடையாது. ஆகவே, இந்த நிலைமையை எப்படிச் சமாளிக்கப் போகிறோமென்று அவர் ஏங்கிப் போனார். நெல் வியாபாரி இதுதான் சமயம் என்று, அப்பவே நெல்லைப் போட்டுடுங்க போட்டுடுங்க என்று அடிச்சுண்டேனே, கேட்டீங்களா? இப்படி ஒரு பேச்சு காதில்படக் கொண்டு தானே அவ்வளவுதூரம் வற்புறுத்தினேன்?...'' என்று சரடு விட்டான்.

கல்யாணி சற்றுநேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். சட்டென்று அவளுடைய முகத்தில் பிரகாசம் ஏற்பட்டது. ''முதலியார்! கிளம்புங்கள், களத்துக்குப் போகலாம்!'' என்றாள்.

முதலியார் திகைத்துப் போனார். ''ஆச்சி! என்ன சொல்றீங்க?''

''ஆமாம்; களத்துக்கு நானே வருகிறேன். வாருங்கள். போகலாம்'' என்று சொல்லி, அவளே முதலில் கிளம்பினாள்.

உள்ளேயிருந்த அத்தையின் காதில் இது விழுந்தது. அவள் ஓடி வந்து, ''கல்யாணி! நான் சொல்றேன், நீ போவாதே'' என்று குறுக்கே மறித்தாள். கல்யாணி அதைப் பொருட்படுத்தாமல் அத்தையை இலேசாக வழியை விட்டு நகர்த்திவிட்டு விரைந்து நடந்தாள்.

அப்போது காரியஸ்தர் முதலியாருக்கும் ரோஷம் பிறந்து. ''அடே! ஓடு! நம்ம ஆளையெல்லாம் தடியும் கையுமாய்க் களத்துக்கு வரச் சொல்லு!'' என்று கூறினார். அதற்குக் கல்யாணி, ''முதலியார்! ஆளும் வேண்டாம். தடியும் வேண்டாம். நீங்கள் மட்டும் என் பின்னோடே வாருங்கள். போதும்'' என்றாள்.

* * *

தூரத்தில் கல்யாணியைக் கண்டதும், நெல் அள்ளியவர்கள் தடியுங்கையுமாய் நின்றவர்கள், வண்டிக்காரர்கள் எல்லாருக்கும் ஆச்சரியமாய்ப் போயிற்று. அந்தப் பக்கங்களில் சாதாரணமாய்ப் பண்ணை வீட்டு ஸ்திரீகள் வயல்வெளிகளுக்கு வருவது கிடையாது. அதுவும் இம்மாதிரி சந்தர்ப்பத்தில், கல்யாணி ஆள்படை ஒன்றும் இல்லாமல் வருவதைப் பார்த்ததும் அவர்கள் எல்லோருக்குமே காரணம் சொல்ல முடியாத திகில் உண்டாய் விட்டது. எல்லாரும் அப்படியே நின்று கல்யாணி வரும் திக்கையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். கல்யாணி கம்பீரமாய் நடந்து நேரே அவர்களுக்கு மத்தியில் வந்து நின்றாள். ''அடே! நீங்கள் எல்லாம் யார்?'' என்று கேட்டாள்.

கொஞ்சநேரம் பதில் ஒன்றும் வரவில்லை. அவர்களில் பெருங் குடிகாரனும் வாயாடியுமான ஒருவன் ''நாங்களெல்லாம் மனுஷங்க'' என்றான்.

''நீங்கள் எந்தப் பண்ணை ஆட்கள்'' என்று கல்யாணி கேட்டாள்.

''புலிப்பட்டி ஆட்களுங்க''

''சரி, இது எந்தப் பண்ணைக் களம்?''

''தாமரை ஓடைப் பண்ணைக்களம்.''

''பின்னே, ஏன் அப்பா இந்தக் களத்தில் வந்து நெல் வாருகிறீங்க?'' ஆட்கள் மௌனமாயிருந்தார்கள்.

''அடே! எல்லோரும் என்னை நன்ருய்ப் பாருங்க. நான் யார் தெரிகிறதா?'' என்று கம்பீரமாய்க் கேட்டாள் கல்யாணி

அப்போது அந்தப் பெருங்குடிகாரன் ''அம்மா! நீ மாரியம்மனச்சே! எனக்குத் தெரியாமே போச்சே! அடே ஆளுங்களா! எல்லாரும் விழுந்து கும்பிடுங்கடா!'' என்று சொல்லி முதலில் தானே திடீரென்று தரையில் விழுந்து கும்பிட்டான். ''அம்மா! தாயே! காப்பாத்தனும்'' என்று புலம்பத் தொடங்கினன். மற்ற ஆட்கள் எல்லாம் பிரமை பிடித்தவர்கள் போல் நின்ருர்கள்.

''அடே! உங்களை யெல்லாம் காப்பாற்றத்தான் நான் வந்தேன். நீங்கள் இப்போது செய்வதற்கு வந்தது பெரிய தப்புக் காரியம். பகல் கொள்ளை அடிப்பதற்காக வந்திருக்கிறீர்கள். இதற்காக உங்களைப் பிடித்துக் காலிலேயும் கையிலேயும் விலங்கு மாட்டி, ஏழு ஏழு வருஷம் ஜெயிலேபோட்டு விடுவார்கள். நீங்கள் ஜெயிலுக்குப் போய்விட்டால், உங்கள் பெண்சாதி பிள்ளைகளை உங்கள் எசமான் காப்பாத்தி விடுவாரா?'' என்ருள் கல்யாணி.

''ஐயோ! எங்க எசமாஞ? செய்யற வேலைக்கு வயத்திலே அடிக்காமே கூலி கொடுத்தால் போதாதா?'' என்ருன் ஒருவன்.

''பின்னே, அவர் சொல்றதைக் கேட்டுக்கொண்டு இந்தத் திருட்டு வேலைக்கு வந்தீர்களே! எல்லரும் திரும்பிப்போய்ச் சேருங்கள். சாயங்காலம் உங்கள் வீட்டுப் பெண் பிள்ளைகளை வரச் சொல்லுங்கள். தலைக்குப் பதக்கு நெல்லு கொடுத்தனுப்பச்சொல்கிறேன். ஏன் நிற்கிறீர்கள்? போங்கள்!'' என்ருள்.

''ஆமாண்டா, போகலாம் வாங்கடா! நமக்கென்னத்துக்கடா தண்டா?'' என்ருன் ஒருவன். முதலில் பத்துப்பேர் கிளம்பினர்கள். அவ)கள் பின்னல் இன்னும் சிலர் போனர்கள். பிறகு பாக்கியுள்ளவர்களும் ''நமக்கு மாத்திரம் என்னடா?'' என்று சொல்லிக்கொண்டு கிளம்பிச் சென்ருர்கள்.

பிறகு, கல்யாணி வண்டிக்காரர்களை அழைத்துப் பேசினள். அதன் பயனக, எல்லா வண்டிக்காரர்களும் நெல் மூட்டைகளுடன் தாமரை ஓடை வீதிக்குச் சென்று, அங்கே, பண்ணையின் சேர் கட்டும் முற்றத்தில் நெல்லைப் போட்டு விட்டு வண்டிச் சத்தத்தை வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தார்கள்.

* * *

இந்த விவரமெல்லாம் புலிப்பட்டி ரத்தினத்தின் காதுக்கு எட்டியபோது, அவன் அவமானத்தினல் குன்றிப் போனன். அவ்வளவுக்கு அவனுடைய குரோதமும் அதிகமாயிற்று. அப்போது தான், கொள்ளிடக்கரைத் திருடனுக்குப் பணம் கொடுத்துக் கல்யாணி வீட்டில் கொள்ளையடிக்கச் செய்ய வேண்டுமென்ற அபூர்வ யோசனை அவனுடைய மூளையில் உதயமாயிற்று.

## அத்தியாயம் 28

## சந்திப்பு

பஞ்சநதம் பிள்ளை ஜீவியவந்தராயிருந்த காலத்தில் கல்யாணி தன்னுடைய இருதயமாகிய கோட்டையைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து வந்தாள். அதில் முத்தையன் பிரவேசிப்பதற்கு அவள் இடங் கொடுக்கவில்லை. அவ்வாறு இடங் கொடுப்பது பாவம் என்று அவள் கருதினள். ஆகவே முத்தையனுடைய நினைவு வரும்போதெல்லாம் சட்டென்று வேறு குடும்ப காரியங்களில் மனத்தைச் செலுத்தி அந்த நினைவைப் போக்கடித்துக் கொள்வாள். ''ஸ்வாமி!'' பாவ எண்ணம் என் மனத்தில் தோன்ருமல் காப்பாற்று!'' என்று கடவுளை வேண்டுவாள். சீதை, தமயந்தி, நளாயினி முதலிய கற்பரசிகளை நினைந்து, மனத்தை உறுதிப்படுத்திக்கொள்வாள். இப்படிச் சதா விழிப்புடனிருந்து மனத்தைக் கட்டுப்படுத்தி வைப்பதிலேயே கவனமாயிருந்தவளுடைய முகத்தில் பஞ்சநதம் பிள்ளை சிரிப்பையும் குதூகலத்தையும் காணமற் போனது வியப்பில்லையல்லவா?


திருபர்: ''விரதம் இருந்து சபரிமலை போறீங்களே கால்ஷீட் பிராப்ளம் வராதா?''
நடிகர்: ''வராது.... டுப்பை மலைக்கு அனுப்பப் போகிறேன்.''
—ராஜி ராதா



நோயாளி: பிரிஸ்கிரிப்ஷனில் ஏதோ தமிழில் எழுதியிருக்கிங்களே டாக்டர்?
வெ. சீதாராமன்: அடடா! ஜோக்கை உன் பிரிஸ்க்ரிப்ஷனில் எழுதிட்டு பிரிஸ்கிரிப்ஷனைப் பத்திரிகைக்கு அனுப்பிட்டேனே!
—சிவசக்தி

புருஷன் உயிர் வாழ்ந்த காலத்தில் கல்யாணி தன்னுடைய உள்ளத்தை எவ்வளவு தூரம் கட்டுப்படுத்தி வைத்திருந்தாளோ, அவ்வளவுக்கு அவருடைய மரணத்திற்குப்பிறகு அதைக் கட்டில்லாமல் சுயேச்சையாக விட்டுவிட்டாள். அதிலும் அவர் தன்னை விவாக பந்தத்திலிருந்து விடுதலை செய்வதாகச் சொல்லிவிட்டபடியால், இனி மூத்தையனைப் பற்றிநினைப்பதில் யாதொரு தவறுமில்லையென்று அவள் கருதினாள். அப்படிக் கட்ட விழ்த்து விடப்பட்ட அவளுடைய உள்ளம் தட்சணமே மூத்தையனைச் சென்று அடைந்து பிறகு அவனை விட்டு அசையவேமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது. கனவிலும் நினைவிலும் மூத்தையனுடைய நினைவைத் தவிர வேறு நினைவே அவளுக்கு இல்லாமல் போயிற்று.

* * *

மூத்தையன் இப்போது எங்கே இருக்கிறான், என்ன செய்கிறான் என்று அறிய அவள் அளவில்லாத ஆவல் கொண்டாள். ஒருவேளை அவன் கல்யாணம் செய்து கொண்டிருப்பானோ என்ற நினைவு தோன்றும்போது அவளுடைய நெஞ்சில் யாரோ ஈட்டியினால் குத்துவது போன்றிருக்கும்.

''இருக்காது; ஒரு நாளும் இருக்காது'' என்று எண்ணி மனத்தைத் திடப்படுத்திக் கொள்வாள். ''அவன் எங்கேயோ? நாம் எங்கேயோ? இனிமேல் எங்கே அவனைக் காணப் போகிறோம்?'' என்று எண்ணி ஒரு சமயம் ஏக்கமுறுவாள். ''இல்லை, இல்லை! கட்டாயம் இந்த ஜன்மத்தில் அவனை மறுபடியும் பார்க்கத்தான் போகிறேன். அவனிடம் நான் கொண்ட அன்பு உண்மையானதானால், அவனை எப்படிப் பார்க்காமலிருக்க முடியும்?'' என்று தேற்றிக் கொள்வாள். ''அந்தக் காலத்திலேயே 'நீ பணக்காரி; நான் ஏழை' என்று சொல்லிக் காட்டினானே! இப்போது பெரிய பணக்காரியாகி விட்டேனே! அதனால் அவனுடைய வெறுப்பு அதிகமாகுமோ என்னமோ?' என்று ஒரு சமயம் பீதியடைவாள். ''அதெல்லாம் இல்லை. மூத்தையன் இதற்குள் தன் மேல் தவறு என்று உணர்ந்திருப்பான். 'இவ்வளவு செல்வமும் உன்னுடையது; உன் இஷ்டம்போல் செய்யலாம்' என்று நான் சொல்வேன். உடனே அவனுடைய மனம் இளகிவிடும்'' என்று இன்னொரு சமயம் உற்சாகப் படுவாள்.

மூத்தையன் பூங்குளத்தில் இல்லை. எங்கேயோ மடத்தில் கணக்குப் பிள்ளையாய்ப் போய்விட்டான் என்ற சமாசாரம்மட்டும் அவளுக்கு அவள் தகப்பனார் மூலமாய்த் தெரிந்திருந்தது. அவன் இருக்குமிடம் எப்படிக் கண்டு பிடிப்பது, அவனை எப்படிச் சந்திப்பது என்பது பற்றி அவள் ஆயிரம் யோசனை செய்தாள். ஆனால், ஒவ்வொன்றிலும் ஏதாவது ஒரு குறை தோன்றிற்று.

இப்படிப்பட்ட நிலைமையிலேதான், கொள்ளிடக்கரைத் திருடனைப் பற்றி வதந்தி அவள் காதில் விழுந்தது. அவனுடைய பெயர் மூத்தையன் என்று கேட்டதும், அவள் உடம்பு சிலிர்த்தது. அவனுடைய பூர்வோத்தரத்தைப் பற்றிக் கொஞ்சம் விசாரித்து, அவன் மடத்தில் கணக்குப்பிள்ளையாயிருந்தவன் என்று தெரிந்ததும், அவளுடைய சந்தேகங்கள் நிவர்த்தியாயின. அப்போதே, மூத்தையனைச் சந்திப்போமா என்ற கவலையும் அவளுக்குத் தீர்ந்து போயிற்று. கட்டாயம் ஒரு நாள் தன்னுடைய வீட்டிலும் அவன் திருட வருவான் என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றி, அது நாளுக்கு நாள் உறுதிப்பட்டு வந்தது. அப்போது எவ்வாறு அவனை வரவேற்பது, என்ன பேசுவது என்றெல்லாம் சிந்திக்கலானாள்.

அப்படி அவன் வருங்காலத்தில் வீட்டில் மனுஷர்கள் அதிகமாக இருக்கக் கூடாதல்லவா? இதற்காகவே, கோபித்துக்கொண்டு ஊருக்குப் போன அவளுடைய தகப்பனாரை அவள் திரும்பிக் கூப்பிடவில்லை. திருச்சிற்றம்பலம் பிள்ளை தம்முடைய இளைய சம்சாரம் குழந்தைகளுடன் தாமரை ஓடைக்கேவந்துவிடத் தயாராயிருந்தார் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தும், அதைப்பற்றி அவள் பிரஸ்தாபிக்கவில்லை.

* * *



# அருள்வாக்கு

'வாழாது வாழ்ந்தாலும் வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது' என்பார்கள். 'இதெல்லாம் சுத்த மூட நம்பிக்கை' என்று இருபது முப்பது வருஷம் முந்தி சொல்லி வந்தார்கள். இப்போதோ, மனுஷ்ய சரீரத்தில் எலெக்ட்ரோ–மாக்னடிக் வேவ்'களுக்கு மூலஸ்தானம் brain (மூளை)தான். உலகத்தை எடுத்துக்கொண்டால் அதன் மாக்னடிக் ஃபீல்டின் மூலஸ்தானம் North Pole (வட துருவம்) ஆகையால் நம் தலையை வடக்குப்பக்கம் வைத்துப் படுத்துக்கொண்டால் மூளையின் சின்ன காந்த சக்தியும் துருவத்தின் பெரிய காந்த சக்தியும் ஒன்றுக்கொன்று 'க்ளாஷ்' ஆகி, மூளை பாதிப்புக்கு ஆளாகிவிடும் என்று ஸயன்டிஸ்ட்கள் சொல்கிறார்கள். அதே ஸமயம் ஜபம், தியானம், பண்ண வடக்குப் பார்த்து உட்காருவது நல்லதென்று சொல்லியிருக்கிறது. தூக்கத்தில் புத்தியும் மனஸும் நமக்கு வசப்படாமல், நம்மையும் மீறித் தூக்கம் நம்மை வசப்படுத்தி ஓய்ச்சலில் அடித்துப் போடுகிறது; அப்போது புத்தி களைத்துக் கிடக்கிறது. அல்லது நம் வசத்திலில்லாததால் கன்னாபின்னா என்று கனவுகளைக் கல்பித்துக் கொள்கிறது. இம்மாதிரி ஸமயத்தில் இந்தச் சின்ன மாக்னட்டை லோகத்தின் பெரிய மாக்னட்டுக்கு நேரே பிடித்தால் நாறுமாறாய் விடும். ஆனால் ஜப, தியான காலத்தில் நாம் மனஸை அப்படியே அடக்கி வசப்படுத்த முடியாதவர்களாயிருந்தாலும் கூட, அப்படிப் பண்ண வேண்டும் என்ற லக்ஷ்யமாவது நமக்கு இருக்கிறது. ஈசுவரன் விஞ்ஞானக் கருவிகளுக்கு த்ருஷ்டமாயுள்ள மின்சார காந்த சக்தியாய் மட்டுமில்லாமல், நம் லக்ஷ்யத்தைத் தெரிந்து கொண்டு அதற்கு அருள் செய்கிறவனாயும் இருப்பதால் தியான காலத்தில் அதே காந்த சக்தி நமக்கு நல்ல பலனைக் கொடுக்கும்படி பண்ணுகிறான். ஷாக் அடிக்கிற எலெக்டிரிஸிட்டியைக் கொண்டே நாம் எத்தனையோ நல்லதைப் பெறவில்லையா?

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

முத்தையனை எதிர்பார்த்து அவள் இராத்திரியில் அநேக நாள் தூங்குவதே கிடையாது. அப்படித் தூங்கினாலும், ஏதாவது கொஞ்சம் சத்தம் கேட்டால் திடுக்கென்று எழுந்து விடுவாள். அவன் எப்படி வருவான். ஓட்டு மேலால் ஏறிக் குதித்து வருவானா, கன்னம் வைத்து வருவானா, அல்லது தீவட்டிக்கொள்ளைக் காரர்களைப்போல் பகிரங்கமாய் வந்து வாசல் கதவை இடித்து, ''கதவைத் திற'' என்று அதட்டுவானா? - இப்படியெல்லாம் எண்ணமிடுவாள். அப்படி வாசல் கதவை அவன் இடித்து, தான் கையில் விளக்குடன் போய்க் கதவைத் திறந்தால், அவன் எப்படித் திகைத்து நிற்பான் என்பதை நினைத்து நினைத்துத் தானே சிரித்துக் கொள்வாள்.

நிலவு எரிக்கும் இரவு நேரங்களில் அவள் வீட்டு முற்றத்தில் உட்கார்ந்து வானத்தையே பார்த்துக் கொண்டிருப்பாள். ''இந்த நிலவு முத்தையன் இருக்கும் இடத்திலும் எரிக்குமல்லவா? இந்தச் சந்திரனை அவனும் பார்த்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருப்பானல்லவா?'' என்று எண்ணமிடுவாள். ''ஒரு வேளை இந்த நேரத்தில் அவனும் என்னைப் பற்றி நினைக்கக் கூடுமல்லவா? என்று எண்ணும் போது அவளுக்கு உடல் சிலிர்க்கும்.

இருட்டுக்காலத்திலும் அவள் முற்றத்தில் உட்கார்ந்து, வானத்தில் மினுக்கிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களைப் பார்த்துக்கொண்டிருப்பாள். ''இந்த நேரத்தில் முத்தையன் கொள்ளிடக் கரையில் எங்கேயோ தன்னந்தனியாய்ப் படுத்திருப்பான்; இந்த நட்சத்திரங்களுடனே அவன் பேசிக்கொண்டிருப்பான்'' என்று எண்ணுவாள். அச்சமயம் இரவு நேரங்களில் கொள்ளிடக்கரையில் நரிகள் ஊளையிடுமென்பது அவள் நினைவுக்கு வரும். ''ஒரு வேளை இருபது முப்பது நரிகளாகச் சேர்ந்து முத்தையனை வளைத்துக் கொண்டால்...'' என்று நினைக்கும் போது அவளுடைய உடம்பெல்லாம் பதறும். சில சமயம் அவளுடைய மனோபாவத்தில், நரிகள் போலீஸ்காரர்களாக மாறிவிடும். ''ஐயோ! அப்படி ஒன்றும் நேராமல் இருக்கவேண்டுமே!'' என்று அவள் பதை பதைப்பாள்.

முத்தையன் திருடனாய்ப் போனது பற்றி அவளுக்கு அவனிடம் எவ்விதத்திலும் அவமதிப்பு ஏற்படவில்லை. முத்தையன் தப்புக் காரியம் எதுவும் செய்வானென்று அவளால் எண்ண முடியவேயில்லை. இந்தப் புலிப்பட்டி ரத்தினத்தைப் போன்ற பாதகர்களைக் கொள்ளை

யடித்தால் என்ன பிசகு என்ற நினைவே மேலிட்டிருந்தது.

முத்தையனைப்பற்றி மற்றவர்களிடம் பேசுவதில் அவள்இப்போது ரொம்பவும் விருப்பம் கொண்டிருந்தாள். காரியஸ்தர் முதலியாரிடமும் அக்கம் பக்கத்தாரிடமும் அடிக்கடி அவனைக் குறித்துப் பேசுவாள். பிரசித்தமான அத்திருடனைப்பற்றி அச்சமயம் எல்லாரும் பேசிக்கொண்டிருந்தார்களாதலால், இவளும் எவ்விதச் சந்தேகத்துக்கும் இடமின்றி அவனைப்பற்றிப் பேசுவது சாத்தியமாயிருந்தது. அவனுடைய பிரதாபங்களை யாராவது வியந்து பேசினால் இவள் அவனை இகழ்ந்து பேசுவாள். யாராவது அவனைத் தூற்றினாலோ, இவள் அவனுக்காகப் பரிந்து பேசுவாள். ''ஆமாம்; உங்கள் வீட்டுக்கு வந்து கொள்ளை யடித்தால் தெரியும்'' என்று அவர்கள் சொன்னால், ''என் வீட்டுக்கு அவன் வர மாட்டானே? ஓடுகிற ஆண்பிள்ளைகளைக் கண்டால் தான் திருடர்கள் விரட்டுவார்கள்!பெண் பிள்ளைகளைக்கண்டாலே பயந்து ஓடிப்போவார்கள்!'' என்பாள்.

முத்தையன் திருடனாகப் போனதின் காரணம் பெரிதும்மிகைப்படுத்தப்பட்ட வதந்தியாகப் பரவி யிருந்தது. அவனுடைய தங்கையைப் பண்டாரசந்நிதியே கெடுக்கப் பார்த்தாரென்றும் முத்தையன் அவரைக் குற்றுயிராய்ப் பண்ணி விட்டான் என்றும், இப்படியெல்லாம் சொல்லிக் கொண்டார்கள். அபிராமிக்குக் கஷ்டம் நேர்ந்த விஷயம் கல்யாணியின் உள்ளத்தில் சிறிது மகிழ்ச்சியை ஊட்டிற்று. ''அந்த அபிராமிக்காகத்தானே என்னை முத்தையன் புறக்கணித்தான்? இப்போது என்ன ஆயிற்று?'' என்று ஒருகணம் உவகையோடு எண்ணினாள். அப்புறம், அந்தப் புத்தி மாறிற்று. ''ஐயோ! அந்தப் பெண் இப்போதுஎங்கே அநாதையாய்த் தவிக்கிறாளோ?'' என்று உருகினாள். அவளை அழைத்துகொண்டு வந்து தன்னோடு வைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டாள். ஆனால், அதனால் என்னசந்தேகம் உண்டாகுமோ என்னமோ? முதலில் முத்தையனைப் பார்த்து, அவனைத் திருட்டுத் தொழிலை விடச்சொன்ன பிறகுதான், அபிராமியைத் தேடவேண்டுமென்று தீர்மானித்தாள்.

நாளாக ஆக, முத்தையனைப் பார்க்க வேண்டுமென்ற அவளது ஆவல் அளவிலடங்காமல் பெருகிற்று.''முத்தையா! முத்தையா! நீ எங்கெங்கேயோ, யார் யார் வீட்டுக்கெல்லாமோ திருடப் போகிறாயே? இந்தப் பாவியின் வீட்டுக்கு



''தபால்லே இங்கிலீஷ் கத்துக்கறயே ரெண்டு வார்த்தை பேசேன்!''
''சார் போஸ்ட்!''
—இளை அ. கதிர்வேல்

வரக்கூடாதா?'' என்று அவளுடைய இருதயம் கதறியது.

* * *

இப்படிப்பட்டநிலைமையில்தான்,ஒரு நாள் இராத்திரி முத்தையன் உண்மையாகவே அவளுடைய வீடு ஏறிக்குதித்து வந்தான். அவனைப் பார்த்து அவன் பிரமித்து நின்றான். அந்தச் சந்தர்ப்பத்தில் அவனுடன் என்ன பேசவேண்டும், எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்றெல்லாம் கல்யாணி எத்தனையோ நாளாக யோசித்து வைத்திருந்தாளாதலால், பளிச்சென்று, ''முத்தையா! உனக்கு என் நகைகள்தானா வேண்டும்?'' என்று கேட்டாள்.

அதன் பிறகு அவள் தொடர்ந்து சொல்ல எண்ணியிருந்த வார்த்தைகளெல்லாம் அவளுடைய நெஞ்சிலேயே அமுங்கிப் போயின, அவற்றைச்சொல்ல அவளுக்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை.

கல்யாணியைப்பார்த்ததும் ஒருகணம் திகைத்துப் போன முத்தையன் அடுத்த கணத்தில் சொல்லமுடியாத அவமானம் அடைந்தான். ''ஆகா! இவள் வீட்டில் திருடவா வந்தோம்?'' என்று நினைத்த போது அவன் உடம்பும் உள்ளமும் குன்றிப்போயின. தட்சணமே அவன் வந்த வேகத்துடனே திரும்பினான். ஒரு தாவுத் தாவிக் கூரை மீதேறி அடுத்த கணம் மாயமாய் மறைந்து போனான்!

ஓடு நொறுங்கிய சத்தமும் கொல்லையில் இரண்டு தடவை விஸில் அடித்த சத்தமும் மட்டும் கேட்காமலிருந்தால், கல்யாணி இது அவ்வளவும் தன் மனப்பிராந்தியில் ஏற்பட்ட சம்பவங்களே என்று எண்ணியிருப்பாள். (தொடரும்)

# வண்டலூரில்

## வன விலங்குகள்

**வ**ண்டலூரில் புதிதாகத் தொடங்கியுள்ளது மிருகக் காட்சிசாலை. சென்னையிலிருந்து 32 கிலோ மீட்டர் தூரம். மிருகக் காட்சி சாலையை அடையும்போது ஏதோ காட்டுக்கே வந்து விட்டது போல் ஓர் உணர்வு. நம்மை வாய் நிறைய வரவேற்பவர் வண்டலூர் மிருகக் காட்சி சாலையின் இயக்குனர் சுப்பராயலு.

''இந்தியாவிலேயே மிகவும் பழைமையான—நூறு வருடங்களுக்கு மேல் உள்ள மிருகக்காட்சி சாலை சென்னை மிருகக் காட்சி சாலைதான். அந்தக் காலத்திலேயே அது மிக அழகாக உருவாக்கப்பட்டிருப்பதாகவும் பூங்காவை உள்ளடக்கியிருப்பதாகவும் கருதிப் போற்றப்பட்டது. ஆனால் இந்நாளைய கணக்குப்படி அம் மிருகக் காட்சி சாலை மிகவும் சிறியது. மிருகங்களுக்கு இயற்கையான சூழலில் இருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டால்தான் உற்சாகமாக இருக்கும். 23 வருடங்களாக மிருகக் காட்சி சாலையில் உள்ள ஆண், பெண் நீர் யானைகள் முதன் முறையாக வண்டலூருக்கு வந்த பின்தான் இணைந்திருக்கின்றன!'' என்றார்.

''நீர்யானைகள்தான் சைவ மிருகங்களாயிற்றே! மனிதனை எப்படிக் கடித்தது?'' என்றேன்.

''கோபம் வந்தால் கண் மண் தெரியவில்லை என்று நாம் சொல்வதில்லையா? அதே போல்தான் மிருகங்களுக்கும்'' என்றார் சுப்பராயலு.

புதிய மிருகக் காட்சி சாலையைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டோம். வலதுபுறத்தில் குழந்தைகள் பூங்கா இருக்கிறது. அதற்கு நேர் எதிரே குரங்குகள். குழந்தைகளுக்குப் பொழுது போகவில்லை என்றால் குரங்குகளைப் பார்த்துக் குதூகலம் அடையலாம்.

நாம் நிற்கும் இடத்திலிருந்து மிருகங்களைப் பார்த்தால் மிருகங்கள் ஏதோ வெகு அருகில் நிற்பது போல் தெரிகிறது. ஆனால் நமக்கும் மிருகங்களுக்கும், இடையில் 18









அடி ஆழமும், 30, 32 அடி அகலமும் உள்ள அகழி சுற்றிலும் இருக்கிறது. இந்த அகழியின் ஆழமும் அகலமும் மிருகத்தின் தன்மைகளுக்கு ஏற்ப மாறும். நாம் நிற்கும் பக்கத்தில் ஓரடி உயரம் கருங்கல் சுவர் இருக்கிறது. சுவருக்கு முன்பாகச் சில செடிகள் நடப்பட்டுள்ளன. செடிகள் கருங்கல் சுவரை மறைக்குமளவுக்கு வளர்ந்துவிடும். அப்போது அகழியோ மதிலோ இருப்பதே தெரியாது. எந்தக் கணமும் நாம் பார்த்துக் கொண்டிருக்கும் சிங்கமோ புலியோ நம்மீது பாயலாம் என்றே தோன்றிக் கொண்டிருக்கும்!

வரிக் குதிரைகள் விடப்பட்டுள்ள இடத்தில் மட்டும் நிறைய முட் செடிகளும், சப்பாத்திக் கள்ளிகளும் காணப்பட்டன. தென் ஆப்பிரிக்காவில் வரிக் குதிரைகள் அதிகம் உள்ள இடங்கள் இம்மாதிரி முட்கள் நிறைந்துள்ள இடங்கள்தானாம்.

குழந்தைகள் பூங்காவில் விளையாட வசதிகள் தவிர மான் குட்டி, முயல்போன்றவையும் இருக்கும். குழந்தைகள் அவற்றைத் தொட்டுப் பார்த்து அனுபவிக்க வசதிகள் உண்டு.

பறவைக் கூண்டுக்கு வந்தோம். ஒரு கூண்டில் நான்குக்கும் மேற்பட்ட பறவைகள் இருந்தன. ''இந்த அபூர்வப் பறவைகள் ஒவ்வொன்றும் 10,000 ரூபாய் பெறுமானமுள்ளவை'' என்றார். அவை முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கக் காத்திருக்கிறார்கள் ஆவலுடன்!

காண்டாமிருகம் இல்லை. அஸ்ஸாமிலிருந்து தருவிக்கக் கடிதப் போக்கு வரத்து நடந்து கொண்டிருக்கிறது.

''யானைகள், சிங்கவால் குரங்கு, நீலகிரிக் கருங்குரங்கு, வெள்ளிமான், வரையாடு ஆகியவை மெல்ல மெல்ல அழிந்து வரும் மிருகங்கள்'' என்று குறிப்பிட்டார் சுப்பராயலு.

சென்னை மிருகக் காட்சி சாலையிலிருந்து வண்டலூருக்கு இன்னும் நிறைய மிருகங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வரவிருக்கின்றன.

வண்டலூர் மிருகக் காட்சி சாலையைச் சுற்றிவிட்டு வருவதற்குள்தொண்டை வரள, கால்களும் கெஞ்சத் தொடங்கி விட்டன. இயக்குனர் தங்கும் விடுதிக்கு வந்து, மின் விசிறி காற்றுக்குக் கீழ் ''உஸ், அப்பாடா'' என்று அமர்ந்து என் அவஸ்தையையே கேள்வியாகக் கேட்டேன். ''32 கிலோ மீட்டர் தூரம் வந்து யார் சார் உங்கள் மிருகக் காட்சி சாலையைப் பார்ப்பார்கள்?''

''இப்பொழுதே சென்னையிலிருந்து வர ஆரம்பித்து விட்டார்களே! சந்தடி மிகுந்த நகரத்திலிருந்து ஒரு நாள் விடுபட்டுக் குடும்பத்துடன் ஒரு பிக்னிக் போவது போல் காலையிலேயே வந்து மதிய உணவை இங்கேயே உட்கொண்டு மாலை திரும்பிச் செல்கிறார்கள். அரை மணி ஒரு மணி நேரத்தில் மிருகக் காட்சி சாலையைப் பார்க்க வேண்டியவர்களுக்கு இருக்கவே இருக்கிறது இண்டியில் உள்ள குழந்தைகள் பூங்கா!''

''தண்ணீர்ப் பஞ்சமில்லையா?''




''பூமி தேவியிடம் தஞ்சம் புகுந்துவிட்டோம். இரண்டு கிணறுகள், நான்கு போர் கிணறுகள் உள்ளன.''

''சரித்திர காலத்துக்கு முற்பட்ட மிருகங்கள் எப்படி இருந்தன என்று காண்பிக்கும் ஒரு பகுதியும், பாம்புப் பண்ணை ஒன்றும் உருவாக்க இருக்கிறோம். மிருகங்கள் விரும்பிச் சாப்பிடும் புல், இலை, தழைகள், பழங்கள் முதலிய எல்லாவற்றையும் நாங்களே சுமார் 300 ஏக்கர் நிலப் பரப்பில் பயிரிடுகிறோம். இதைத் தவிர வனவிலங்கு பூங்கா அமைந்துள்ள இடம் 965 ஏக்கர் விஸ்தீரணம் உள்ளது.

''ஆராய்ச்சியாளர்களுக்கு இந்த வனவிலங்குகள் பூங்கா ரொம்ப வசதி. குறிப்பிட்ட ஒரு மிருகத்தை அதன் இயற்கையான சூழலில் கவனித்து ஆராய்ச்சிகள் செய்யலாம்.

''காரிலேயே சென்று பார்க்கும் வசதியை இன்னும் சில காலத்துக்குள் செய்து கொடுக்கப் போகிறோம். உயரத்தில் மின்சாரத்தால் இயங்கும் விஞ்ச் அமைக்கவும் உத்தேசம் உள்ளது.'' திட்டங்களைச் சரமாரியாக அடுக்கிக் கொண்டே போனார் இயக்குனர் சுப்பராயலு.

அவருடைய கனவுகள் சீக்கிரமாக நனவாக வாழ்த்துவோம்.

-சலன்

# தமிழ்ச் சிறுகதை ஹிந்தி திரைப்படம



ஓர் ஐந்து பக்கத் தமிழ்ச் சிறுகதை, ஹிந்தித் திரைப்படமாக வந்திருப்பது இதுவே முதல் தடவை. 'அம்பை' எழுதிய 'மிலேச்சன்' என்ற சிறுகதைதான் 'பஹலா அத்யாய' என்ற ஹிந்தித் திரைப்படத்தின் வித்து. பூனா பிலிம் இன்ஸ்டிடியூட்டில் பயின்ற விஷ்ணு மாத்தூர் இதன் டைரக்டர். 'அம்பை'யின் கணவர். திரைக்கதை அமைப்பில் மட்டுமின்றி, படத்தின் தயாரிப்பிலும் கணவருக்கு உதவியிருக்கிறார் 'அம்பை'.

நீல ரூல் போட்ட வெள்ளைத் தாளில் கையெழுத்து வடிவில் டைட்டில் கார்டு காண்பிக்கப்படும்போதே, இது சற்று வித்தியாசமான படமாக இருக்கப் போகிறது என்ற நினைப்பை உண்டாக்கி விடுகிறது.

பல்கலைக் கழக மாணவன் ரவி, சரித்திரத்தில் பி.எச்.டி. பட்டம் வாங்க வந்திருக்கிறான் நகரத்துக்கு. நகர வீதிகளில் நடத்தும், பஸ்களில் ஏறி இறங்கியும் அவனால் முழுமையாக அந்த நகரத்துடன் இணைய முடிவதில்லை. ஊரிலிருந்து, வங்கியில் பணிபுரியும் தங்கைக்கு வரன் பார்க்கச் சொல்லிப் பெற்றோரிடமிருந்து கடிதம் வேறு இடையிடையே வருகிறது. உறவினரை அதன் நிமித்தமாகச் சந்திக்கப் போகிற அலைச்சல். பிள்ளை வீட்டுக்காரர்கள் கேட்கிற வரதட்சிணை...

டாக்டரேட்டுக்கு அவன் சமர்ப்பிக்கும் முதல் அத்தியாயம் இன்னும் பேராசிரியரால் பார்க்கப்படாமலே இருக்கிறது. புரொபஸர் ரொம்ப பிஸி.

ஒரு மாணவனை வெளியேற்றியதையும், இன்னோர் இடத்தில் ஒரு மாணவன் சித்திரவதைக்குள்ளானதையும் காரணம் காட்டி, பல்கலைக் கழகத்தில் மாணவர் யூனியன், கூட்டம் கூட்டி விவாதிக்கிறது. காரசாரமாக கோஷம் எழுப்புகிறது. கல் எறிகிறது..

இவை எதையுமே பெரிதாய் எடுத்துக் கொள்ளாமல் மனசிற்குள் குமைந்து கொண்டு இருக்கும்பொழுது, மாணவர்கள் பார்ட்டி ஒன்றில் சக மாணவனின் மிகச் சாதாரணமான கேள்வி ஒன்றிற்கு ஆத்திரத்துடன் பதில் அளிக்கிறான். பிரித்து விலக்கப் படுகிறான். அதுவரை தான் சௌக்யமாக இருப்பதாகவே, மனக் குமைச்சல்களை அமுக்கிக் கொண்டு எல்லாரிடமும் சொல்லி, பழகி வந்தவன் — இப்போது வெடிக்கிறான். குமுறுகிறான். நண்பனிடம் அவன் எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்தவுடன் அவன் மனசு மிக இலேசாகி விட்ட மாதிரி இருக்கிறது. மறு நாள் காலை நண்பனைப் பார்க்கிற போது, தனக்கு ஒன்றுமில்லை என்றும் தான் சரியாகி விட்டதாகவும் சொல்கிறான். இனி இந்த நகரமும், இந்த வாழ்க்கையும் அவனுக்குப் பழகிவிடக் கூடும்...

''இதில் சில பக்கங்களைக் காணோம் சார்!'' என்று (கிட்டத்தட்ட ஐந்நூறு அடி ஓடிய பிறகுதான்) முதல் உரையாடலே வருகிறது. இடம்: யூனிவர்சிடி லைப்ரரி. ''என்ன செய்வது! சிலபேர் அப்படித்தான் கிழித்துக் கொண்டு போய் விடுகிறார்கள். வேணுமானால் புகார் எழுது!'' என்கிறார் லைப்ரரியன்.

காமிரா பல இடங்களில் கதா பாத்திரம் திரையில் தோன்றும் முன்னும், தோன்றி மறைந்த பின்னும் அப்படியே நிலையாக இருக்கிறது. இது ஒரு விதமான உத்தியாம். காமிராமேன் நவ்ரோஸ் கன்ட்ராக்டர் சென்னை வாசி.

படத்தில் இசை இல்லை. பின்னணி இசை மிக மிகக் குறைச்சல்.

பம்பாய் பல்கலைக் கழகத்தில் படம் எடுக்க அனுமதித்தது இதுவே முதல் தடவை.

16 எம்.எம்.மில் எடுத்திருக்கிறார் படத்தை. 35 எம்.எம்.மில் பிரிண்ட் போட்டு, பிலிம் ஃபெஸ்டிவலுக்கு அனுப்பத் தயாராயிருக்கிறார் விஷ்ணு.

-சாருகேசி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani
Editor: K. Rajendran

# இதோ! ஒரு புதிய இருமல் நிவாரணி ஒரு பெரிய வித்தியாசத்துடன்...

# காஃப்ரெம்-5

## மூலிகைகளாலான இருமல் நிவாரணி

## சக்தி வாய்ந்தது மட்டுமல்ல
## தீய பின் விளைவுகள் இல்லாததும் கூட.

இருமல் ஏற்படுவது இயற்கையே. ஆனால் அளவுக்கு அதிகமாக இருமுவது நல்லதல்ல. இருமலைக் கட்டுப்படுத்த, நிச்சயமாக நிவாரணம் அளிக்கும் ஓர் இருமல் மருந்து தேவை. ஆனால் அதே சமயம் அதனால் தூக்கம், வாய்-தொண்டை உலர்வது, வாந்தி முதலிய தீய பின் விளைவுகள் எதுவும் ஏற்படவும் கூடாது.

**காஃப்ரெம்-5 மூலிகைகளாலான இருமல் நிவாரணி.**



காஃப்ரெம்-5 இயற்கை தரும் மூலிகைகள் அடங்கியது. எனவே தூய்மையானது: மென்மையானது. தீய பின் விளைவுகள் ஏதும் இல்லாதது. அதே சமயம் அதிக சக்தி வாய்ந்தது. நிச்சய நிவாரணம் அளிப்பது. ஐந்து மூலிகைகள் இதில் உள்ளன: ஆடாதோடை, கிருஷ்ண துளசி, மர மஞ்சள், மஞ்சள் மற்றும் அதிமதுரம் இருமலைக் கட்டுப்படுத்தி, நிவாரணம் அளிப்பதில் இவற்றின் திறன் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

**காஃப்ரெம்-5 செயல்திறன்— இருமலை நன்கு கட்டுப் படுத்துகிறது.**



காஃப்ரெம்-5 விரைவாகவும் இதமாகவும் செயல்பட்டு, தொண்டையில் புண்ணையும் எரிச்சலையும் தணிக்கிறது: சுவாசப் பாதையை விரிவாக்கி, அடைப்புகளை நீக்கி எளிதாக சுவாசிக்க உதவுகிறது.

**காஃப்ரெம்-5 வித்தியாசமானது.**

காஃப்ரெம்-5 முற்றிலும் வேறுபட்டது. ஏனென்றால் இது முழுமையாக மூலிகைகளாலேயே ஆனது. இதில் ஆல்கஹாலோ, தூக்கம்-மயக்கம் உண்டாக்கும் பொருள்களோ இல்லை. எனவே இது மிகவும் பாதுகாப்பானது. தீய பின் விளைவுகள் எதுவும் இதனால் ஏற்படாது.

**காஃப்ரெம்-5 அனைவருக்கும் ஏற்றது**

காஃப்ரெம் 5 முழுமையாக மூலிகைகளால் தயாரிக்கப் பட்டிருப்பதால் இது குடும்பத்தில் அனைவருக்கும் ஏற்றது. மிகவும் பாதுகாப்பானது. சிறு குழந்தைகளுக்கும் கூடக் கொடுக்கலாம். இதன் இனிமையான சுவையை அவர்கள் மிகவும் விரும்புவார்கள்.



**காஃப்ரெம்-5 சிறந்த பொருள் களுக்குப் பெயர் பெற்ற டிடிகே குரூப் வழங்குவது.**

தேர்ந்தெடுத்த மூலிகைகளாலான இணையற்ற தயாரிப்பு.




# காஃப்ரெம்-5

## சக்தி வாய்ந்தது. பாதுகாப்பானது. இயற்கையானது.

தற்போது தமிழ்நாட்டில் மட்டுமே கிடைக்கும்.

ஒரு TTK தயாரிப்பு

HTM-TTK-1060

REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka

